குலமகன் போன்றவன். ஆதலின், அவசியமாய் நீயே, அவ்வேஷம் தரித்தல் வேண்டும்.

பாட்டம்.—தீராத காரியமாயிருத்தலால், அப்படியே செய்வேன். ஆனால், வேஷத்தில் என் தாடிக்கு இன்னசாயம்போட்டுக்கொண்டு வரவேண்டுமென்பது எனக்குத் தெரியவில்லை.

க்வீன்ஸ்.—உன்னிஷ்டம்போற் செய்யலாம்.

பாட்டம்.—சுத்தமஞ்சள் நிறமோ, செம்மஞ்சள்நிறமோ, சிவப்பு நிறமோ எனக்குப்பிடித்தயாதேனும் ஒரு நிறத்தை யேற்றிக்கொண்டு வருவேன்.

க்வீன்ஸ்.—தோழர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் பாடம்பண்ணிக் கொள்ளவேண்டியவற்றைப் பெற்றுக்கொள்ளுங்கள். அவற்றைச்செவ்வையாய் நாளை இரவிற்குள்பாடஞ்செய்துகொண்டு, பட்டணத்துக்கு ஒருநாழிகை வழித்தூரத்துக்கு அப்பாலிலிருக்கும் அரண்மனைக்காட்டுக்கு வந்து சேரும்படி, உங்களைக்கேட்டுக் கொள்ளுகிறேன். அவ்விடத்தில் நமது கூத்தையாடிச் சரிபார்த்துக்கொள்ளலாம். பட்டணத்துள் ஓரிடத்துச் சந்தித்தால், அங்கு ஜனங்கள் கூடுவார்கள், நமது ஏற்பாடு இன்னதென்றும் பிறருக்குத் தெரிந்துவிடும். எல்லோரையும் இன்னுமொருமுறை கேட்டுக்கொள்ளுகிறேன், நான் சொல்லியபடி தவறாமற் சந்திக்கவேண்டும்.

பாட்டம்.—அப்படியேநாம் சந்திப்போம்; அவ்விடத்தில் யாருமறியாமலும், தைரியமாயும் நமது சம்பாஷணைகளைச் சொல்லிச்சரிபார்த்துக் கொள்ளலாம். பிரயாசைப்பட்டு எல்லாவற்றையும் செவ்வையாய் ஒழுங்கு படுத்திக்கொண்டு எல்லோரும் வரவேண்டும்.

க்வீன்ஸ்.—அரசனது *கருவாலி மரத்தருகிற் சந்திப்போம்.

பாட்டம்.—போதும்; ஆறுநூறானாலும், நூறு ஆறானாலும் சந்திப்போம்.— (எல்லோரும் போதல்.)

முதலாவது அங்கம் முற்றிற்று.

எஸ். நாராயணசாமி ஐயர் பி. ஏ.

* Oak.

## வைத்தியநாத நாவலர், அவர் பிரபந்தங்கள்.

1. வைத்தியநாத நாவலரென்ற இப்புலவர்பெருமான் தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த நாகபட்டணத்திற்கடுத்த திவ்யக்ஷேத்திரமாகிய கமலாலயமென்ற திருவாரூரைப் பிறப்பிட மாகக் கொண்டவர். இவர் ஸ்ரீவன்மீகநாததேசிகருடைய குமாரர். இந்த வன்மீகநாததேசிகர் கவிபாடுந்திறத்தில் மிக சிரேஷ்ட ரென்பதற்குக் கிஞ்சித்துஞ் சந்தேகமில்லை. இவர் "தமது பாவன்மையாற் பரிசு பெற்ற சூனம்பேட்டை மானியமும் உப்பளமும் நாளது வரைக்கும் அவர் சந்ததியார் அநுபவித்து வருகின்றார்கள்" என்று ம-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களெழுதுகிறார்கள். இவ்வாறு தந்தையாருஞ் சிறந்தவித்வானாயிருந்ததினாலன்றோ புத்திரரும் சுபாவ நியமத்தின் படி யங்ஙனம் தோன்றினர். இப்போது, மன்னார் குடித்தாலுக்காவைச்சேர்ந்த திருக்களரென்னு மூரில், மிகவயோதியராயிருக்கின்ற ஸ்ரீமத் சூரிய மூர்த்தி தேசிகரென்பவர் நமது வைத்தியநாதநாவலருடைய ஆறுவது சந்ததியாராம்.

2. இவர் 17-ம் நூற்றாண்டின் இறுதியிலும், 18-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலு மிருந்தவர். இவர் இக்காலத்திலேதானிருந்தா ரென்பதைப்பற்றி வரைந்து சுட்டுவோம். இராமநாதபுரத்தில் கி. பி. 1685-ம்௵ முதல் 1723-ம்௵ வரைக்கும் அரசாண்ட இரகுநாத சேதுபதியின் வாசல் வித்வானாயிருந்த படிக்காசுப் புலவர் நமதுநாவலரிடங் கல்விகற்ற மாணாக்கராம். ஆகவே நாம் மேலே சொல்லிய காலக்கணக்குத்தவறில்லை யென்பதுநன்றாய் விளங்கும். படிக்காசுப்புலவர் இவருடைய மாணாக்கரென்பதற்கு ஆதாரமாகக்,

" கூடுஞ்சபையிற் கவிவாரணங்களைக்
 கோளரி போற்
சாடுஞ்சதாசிவசற்குருவே
 முன்னூன்றந்தந்தைதம்மாற்
பாடும்புலவர்க ளானோமின்றிச்
 செம்மற்பட்டி யெங்குங்
காடுஞ்செடியு மென்னோ
 தமிழ்க்காரிகை கற்றதுவே."

என்று படிக்காசுப்புலவரே பாடிய செய்யுளைக் கொள்க. மேலும் நாம் முன்னே ஸ்ரீமத் சூரியமூர்த்திதேசிகரிவரது ஆருவது சந்ததியாராமென்றுகுறித்தவிஷயம் மேற்கூறியகாலக்கணக்கையேகதேசம் வற்புறுத்துகின்றது.

3. வைத்தியநாத நாவலருடைய மதமோ சைவமதம். இவர் சப்த விடங்க க்ஷேத்திரங்களிலேயதிகப் பிராதாநியத்தையடைந்த திருவாரூரிலே அபிஷேகஸ்தர் மரபிலே சிறப்புற்றோங்கியவர். இவர் ஓர் அருமையான வித்வானென்று சொல்லுவதற்கு ஐயமேயில்லை. இவர் மலையாளத்து இராசாவின் பேரிற் சில பிரபந்தங்கள் பாடி, அவ்விராஜனிட மிருந்து கிராமங்களும், வேறு சிலபரிசுகளும் அளிக்கப்பெற்றவர். மேலு மிவர் இலக்கணக்கொத்து நூலாசிரியராகிய சுவாமிநாததேசிகரால் "திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய வைத்தியநாதன்" என்றும், கவிவீரராகவ முதலியாரால்,

"ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடாரோ நாற்பத்
தொன்பதின்ம ரென்றோ யுரைப்பாரோ—விம்பர்
வன்மீக நாதனருள் வைத்தியநாதன்புடவி [புகழ்
தன்மீதந் நாட்சரித்தக்கால்."

என்றும் புகழ்பெற்றவர்.

4. இத்தகைய நம்புலவர் சிகாமணி, சோழநாட்டிலேயுள்ள ஆமாத்தூர் என்ற மாதை யென்னு மூரிலிருந்து கொண்டு சிற்றரசு புரிந்த குறுநிலமன்னனாகிய திருவேங்கட சுவாமி யென்பவரால் ஆதரிக்கப்பட்டுப் பரிபாலநஞ் செய்யப் பெற்றவர். இந்தவிஷயமானது நமது வைத்தியநாத நாவலருடைய மூத்தகுமாரராகிய சதாசிவ நாவலரால்,

"வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதையரதிபன் வரகுண மேரு
கல்விக்கெல்லை கருணைக் காகரம்
பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமாலுலகஞ் செவ்விதிற் புரக்கு
மேதகு புகழ்த்திரு வேங்கட நாத
னே இனனைக."

என்று இலக்கண விளக்கச் சிறப்புப் பாயிரத்திற்கூறப்பட்டிருப்பதினாலேயினிது விளங்குகின்றது.

5. வைத்தியநாத நாவலரியற்றிய பிரபந்தங்களாவன, இலக்கண விளக்கமும், பிரபோத சந்திரோதயமும், வேறு சில சிறுநூல்களுமாம். இவர் மேலே சொல்லிய இரண்டு பெரிய பிரபந்தங்களையும் மாதை மன்னவன் திருவேங்கடநாதனுடைய வேண்டுகோளிற் கிணங்கியே செய்தனர். இலக்கணவிளக்கமானது அங்ஙனஞ் செய்யற்பட்டதற்கு, மேலேயக்நூற்சிறப்புப்பாயிரத்தினின்றும் நாமெடுத்துக்காட்டினபாகமானது தக்க சான்றுபகரும். இங்ஙனமிதுநிற்க. மெய்ஞ்ஞாந விளக்கமென்னு மறுநாமத்தையுடைய பிரபோதசந்திரோதய மானது நமது நாவலனையாதரித்து வந்த திருவேங்கடநாதராலியற்றப் பட்டதென்று கூறி மயங்குவாரு முளர். இவ்வாறுஅவர்கள் பிராந்தியடைந்ததற்குக்காரணமென்னவென்று சற்று விசாரித்துப் பார்ப்போமானால்,

"போதத்தமிழ்க்கும் வடகலைக்கும்
புலவோர் தமக்கும் பொருள் விரித்துச்
சீதைக்கிறைவனென நீதிச்செங்கோல்
செலுத்தித் திசை புரந்து
வேதப்பனுவன் மெய்ஞ்ஞாந விளக்கா
லுலகை விளக்கு மெங்கண்
மாதைத் திருவேங்கடநாத மறையோன்
வாழிவாழியவே."

என்ற ஒரு விருத்தமே யென்று வெளிப்படும். ஆகவேயவர்களது மயக்கத்தைக் கொஞ்சந்தெளியவைத்தல்வேண்டியது ஆவசியகம். இந்தப் பிரபந்தமானது திருவேங்கடநாதர் வேண்டுகோளின்படி வைத்தியநாத நாவலரியற்றினரென்று முன்னே கூறியிருக்கிறோமாகவே, வேங்கடநாதர் ஏவுதற் கருத்தாவும், நாவலரியற்றுதற்கருத்தாவுமாவார்கள். மேலும் மேலேசொல்லிய செய்யுளில் "மெய்ஞ்ஞாந விளக்காலுலகை விளக்கும்" என்றதொடர்க்கு, அவர் பிரயோச்சியனைய் மாத்திரமிருந்து விளக்குவித்தாரென்று அந்தர்ப்பாவிதணிச்சாய்ப் பொருள் கொள்ளலாமாகப், பிரயோசகனாய் நின்று விளக்கினாரென்றுபொருள் கொண்டது சமயோசிதமாகச் சொற்பொருளுணரு மாற்ற லில்லாமையினாலேதானென்க. இதுவுமல்லாமற் சென்னையிலிருந்த வித்வான் தாண்டவராய முதலியாருடைய பிரபோத சந்திரோதயப்பிரதியில் நாவல ரியற்றினதாகக்குறிக்கப் பட்டிருப்பதினாலும், மதுரை, நெல்லை, புதுவை முதலிய விடங்களிற் கன்னபரம்பரையாக நாவ

லரியற்றினாரென்று வழங்குவதினாலும், யாங்கூறுவதே திருவாரூர் அபிஷேகஸ்தர்கட்கும்,தருமபுரவாதீனத்தார் முதலாயினர்க்கு மொப்பமுடிந்ததாமாதலானு மவர்தேடியஆதாரமவரையே தியங்கவிட்டதென்றுகொள்ளல் வேண்டியதாகிறது. இம்மயக்கம், தவறா யச்சிடப்பட்ட மூலம் பற்றி யுற்பத்தியானது போலும்.

6. இனி யிலக்கணவிளக்கத்தின்குணத்தைப் பற்றிப்பேசுவோம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்று சொல்லுகிற ஐந்துபாகங்களு மடங்கிய வியாகரணங்கள் தமிழிற் கிடைப்பதரிது. கிடைத்தாலு மொருவேளை யதிகமாய் விரிந்திருக்கு மில்லாவிடில் மிகச் சுருக்கமாயிருக்கும். இவ்விரண்டு குற்றமுமில்லாமல், மாணாக்கர்க்குப்போதுமான அளவினை யுடையது இலக்கண விளக்கமொன்றேயாம். தமிழாராய்ச்சிக்குத் தொல் காப்பியவுணர்ச்சியதிக ஆவசியகமில்லை யென்பது சொல்லாமலே ளவிங்குமாதலாலும், சான்றோரிதற்குக் "குட்டித் தொல் காப்பிய"மென்று பெயரிட்டிருக்கின்றார்களாதலாலு மிது ஒரு சிறந்த வியாகரணமென்பதற்கு ஆக்ஷேபனையில்லை யாதலாலும், இதையே படித்தாற் போது மென்பது பெறற்படுமென்க. நாவலர் தொல்காப்பியர்போல யாப்பையுமணியையும் பொருளதி காரத்திலடக்கி மூன்றதிகாரமாக்கினார். எழுத்திலுஞ் சொல்லிலும் பெரும்பாலும் நன்னூலைத்தழுவியே யெழுதப்பட்டிருக்கிறது. நன்னூலிற் குற்றமெனக் கண்ட சிலவற்றைத் திருத்தியு மெழுதியிருக்கிறார். அநேக சூத்திரங்கள் நன்னூலார் சூத்திரங்களாகவே காணப்படுகின்றன. பாயிரமொழிந்த 407 நன்னூற்சூத்திரங்களையும் 372 விதிகளிலடக்கி விட்டார். பாயிரத்திற் கூறிய 55 விதிகளையும் பொருளதிகாரம் பாட்டியலில் 129-முதல் 142 வரைக்குமுள்ள 14 விதிகளிலடக்கினார். இனி மூன்றாவது ஆகிய பொருளதிகாரத்தில், முதலியலாகிய அகத்திணையியலில் மிகுதியும் நம்பி யாண்டர் நம்பி செய்த அகப்பொருள் விளக்கத்தையும்,தொல் காப்பிய வகத்திணையியலையுமநுசரித்தே சூத்திரஞ் செய்திருக்கிறார். இரண்டாவதியலாகிய புறத்திணையியலில் ஐயனாரிதனார் புறப்பொருள் வெண்பாமாலையை யநுசரியாது தொல் காப்பியத்தையே யநுசரித்திருக்கிறார். மூன்றாவதியலாகிய அணியியலானது தண்டியலங்காரத்தையேயநுசரித்தெழுதப் பட்டிருக்கிறது. அநேக சூத்திரங்கள் தண்டியார் சூத்திரங்களாகவே காணப்படுகின்றன. உதாரணச் செய்யுட்களும் அதனின்றே யெடுத்தோதப்பட்டிருக்கின்றன. (ஆகவே தண்டியலங்காரத்திற்குஉரையானது வைத்தியநாத நாவலர்க்கு முன்னரே யெழுதப்பட்டிருத்தல் வேண்டும்.) இனி நான்காவதியலாகிய செய்யுளியல் யாப்பருங்கலத்தைத் தழுவி யெழுதப்பட்டிருக்கிறது. ஐந்தாவதியலாகிய பாட்டியலில் முதல் 128 சூத்திரம் வரை, வச்சணந்திமாலை, சிதம்பரப்பாட்டியல் முதலிய நூல்களின் தாற்பரியங்களிற் சில எழுதப்பட்டுள. 128 முதல் 142வரை நன்னூலார் பாயிரமாயொழிய, 142 முதல் 181 வரை தொல்காப்பிய மரபியலினிறுதியாகின்றது. இது 941சூத்திரங்களை யுடையது. இனி, நம் நாவலர் சூத்திரஞ் செய்ததோடே நில்லாமல், இதற் குரையுமெழுதினார். இந்தமாதிரியாக நூலாசிரியரேயுரையு மெழுதுகிறவழக்கம் தமிழிற்கிடையாது. இவர் தான் முதல் முதலில் இவ்விதமாக உரையையு மெழுதத் தொடங்கினார். இவரைப்பார்த்துப் பிற்காலத்தார் சிலரும், தங்கள் தங்கள் நூற்கு உரை எழுதியிருக்கிறார்கள். இவர் தமது உரையிற் பிறர் மதங்களைக் கண்டிப்பது வழக்கம். தொல்காப்பிய விதிகளிற் சிலவற்றை உரையிலே தழீஇயினார். தொல்காப்பிய வுரைகளில் நச்சினார்க்கினியத்தையே யிவர் அதிகமாகக்கையாடி யிருக்கிறார். மேலு மகத்திணையியலில், தொல்காப்பிய வுரையிற் காணப்பட்ட சில விஷயங்களைச் சூத்திரங்களாக வகுத்தார். அணியியலில், தண்டியலங்காரவுரையிற் கூறிய சில உட்பிரிவுகளை விதியிலே யிவர் கூறினார். பாட்டியல் 181 சூத்திரங்களும் நமது நாவலரால் எழுதப்படவேயில்லை. இந்த இயலானது வைத்தியநாதநாவலருடைய 2-வது குமாரராகிய தியாகராசதேசிகராற் சேர்க்கப்பட்டது. இந்நூற்குப்பாயிரமும், சொல்லணிச் சூத்திரங்களும் நமதுநாவலருடைய மூத்தகுமாரர் சதாசிவ தேசிகராற் செய்யப்பட்டன. ஆகையினாலே யிவர் சொல்லணியும் பாட்டியலும் மிகப் பயன்படத்தக்கன வல்லவென்று விடுத்து விட்

டார். மேலுந்தற்காலமாணவர்க்குச் சொல்ல ணியும் பாட்டியலும் வேண்டுவதின்று. ஆகவே 941 விதிகளில் 207 விதிகள் நாவலராற் செய்யற்படவே யில்லை பயனின்மையால். ஆதலால் மீத முள்ள 734 விதிகளுமே மாணுக்கர்கட்கு மிரம்ப உபயோக மானவை. இது கிடக்க. திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் நாவலருடைய இலக்கண விளக்கத்தை யவிக்கும் பொருட்டுச் சூருவளியையேவினர். இச்சூருவளியை "அநியாயகண்டன" மென்று ம-௱-௱-ஸ்ரீ சி. வை. தாமோதரம்பிள்ளை யவர்கள் கூறியதுபோல் நாம் ஒருகாலத்தும் சொல்லற்படாது. இக்கண்டனத்தை யவர் வேண்டுமென்று எழுதினபோதிலும், சில இடங்களில் நமது நாவலர் செய்த பிழைகளையுமெடுத்துக்காட்டி யிருக்கின்றனர். சூருவளியின் மூலமாயே நம் இலக்கண விளக்கத்திற்கு அதிக மேன்மை யென்று யாவரும் அறிதல் வேண்டும்.

7. இனி 2-வது ஆகிய மெய்ஞ்ஞான விளக்கமென்ற பிரபோத சந்திரோதயத்தைப் பற்றிப் பேசுவோம். ஆங்கிலேயத்தில் (Allegory)என்றதற்குச்சமானமாக இயற்றற்பட்டுள்ள இந்நூல் முதல் முதலில் வடமொழியில்நாடகரூபமாகக் கிருஷ்ணமிச்சிரன் என்றவராற் செய்யற்பட்டுளது. அதை மொழிபெயர்க்கப் புகுந்த நமது ஆசிரியர் நாடகரூபத்தை யொழித்துக் காவிய ரூபமாக எழுதியது யாது காரணம் பற்றியோ வறிகிலேம். வேதாந்த மாகிய பாற்கடலை நாவலர் தமது அறிவென்ற மந்தரமலையை மத்தாக நாட்டிக்கடையவே பிரபோத சந்திரோதயமாயிற்று. இந்தப் பிரபந்தமானது பாயிரமுட்பட 48 சருக்கங்களடங்கியது. இதில் 2012 செய்யுட்களுள. இது விருத்தப்பாவினுற்செய்யற்பட்டிருக்கிறது. இதன் விஷயமின்ன தென்று கொஞ்சஞ்சொல்லுவோம். மாயையென்றவள்பிரம சந்நிதானத்திலே விகாரம் புரிந்து கர்ப்பமடைந்து மானந்தன் என்றெரு புத்திரனைப்பெற்றுள். அவன் பிரவிர்த்தி, நிவர்த்தி, என்ற இரண்டு மாதர்களையுங் கலியாணஞ்செய்து கொண்டான். மானதனுக்கு மூத்தமனைவியாகிய பிரவிர்த்தியினிடமிருந்து மோகன், அகங்காரன், மதனன், இடம்பன் முதலாகிய அநேக புத்திரர்களும், தீவினை, கபடி, என்ற விரண்டு புத்திரிகளும் பிறந்தார்கள்; இனி இளையமனைவியாகிய நிவிர்த்தியினிட மிருந்து விவேகன், நிருபகன், பொறுமை முதலான பல குமாரர்களும், மயித்திரி, கருணை முதலிய சில பெண்களும் பிறந்தார்கள். இவ்விரு திறத்துப்பிள்ளைகளுக்கும் பாட்டியாகிய மாயை யென்பவள் அவரவர்களுடைய குணங்களுக்கு ஏற்றபடி விவாகமகோற்சவம் நடத்தி வைததாள். பிரவிர்த்தியின் மக்கள் அசுரர்களைப் போலவும், நிவிர்த்தியின் மக்கள் தேவர்களைப் போலவும் வளர்ந்துவந்தார்கள். பிற்பாடு இவ்விருபகுதிப்பிள்ளைகளுந் தங்களுக்குள் மாறுபட்டு மோகன் அரசாளும்படியும், விவேகன் காட்டிற்குப் போகும்படியும் நேரிட்டது. பிறகு விவேகன் குலம் விளங்கப் பிரபோதன் தோன்றித் தானை கூட்டி, யுத்தத்திற்குச்சென்று மோகன் முதலானவர்களை யெல்லாம் மூலதோ ஹாரியாக்கிவிட்டான். பிறகு பிரபோதன் முடிசூட்டற்படுகின்றுன். இஃதுடன் காவியமுடிகின்றது. இதையெழுதியபோது நாவலர் மனத்திற் குருக்ஷேத்திர யுத்தத்தைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்திருக்கவேண்டு மென்று தோன்றுகின்றது. பிரபந்தத்தின் நடை வெகு நளினமாயும், ஒழுகிய ஓசையோடு கூடியதாயுமிருக்கின்றது. படிக்கும்போதே மிரம்ப இன்பமளிக்கக்கூடியதாகவுங் காணற்படுகின்றது. இந்தமாதிரியான பிரபந்தங்கள் நந்தமிழிற் கிடைப்பது மிகவுமருமை. இதிலே "கனஞ்சடையென்றுருவேற்றிக்கண்மூடிக்கதனுஞ்" சாஸ்திரிமாருடைய துர்க்குணங்களை மிகுதியுங் கண்டிக்கின்றுர். மனிதர்களுக்குச் சற்குணபிவிர்த்தியுண்டாதல்வேண்டுமென்ற நோக்கத்துடனேயே இவரிதை யெழுதியிருக்கிறுரென்று நினைப்பதற்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. சாஸ்திரிமார்களுடையவேயன்றிப் பற்பல மடங்களிலுள்ள தம்பிரான்களுடைய தீ யொழுக்கத்தையும் நன்கு கண்டிக்கிறுர். இக்காவியத்திற் காணற்படுகிற ஒவ்வொருவரும் அவரவருடைய குணங்களுக்குத் தக்கபடியே பேசுகிறுர்கள். தங்கள் குணங்களோடு சாமஞ்சஸப்படாத வார்த்தைகளை யொருவரும் பேசவேயில்லை. இப்பிரபந்தமானது சிலவிடங் களிற் பரிகாசநடை (Sarcastic Style) யோடு எழுதப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு கவியும் ஆழ்ந்த நுண்

ணிய பொருளை விளக்குகின்றது. பெரும்பாலும் செய்யுட்களெல்லாம் வெகு சுகமாக அமைந்திருக்கின்றன. சமயௌசித்யமாகப் பதங்களும் பிரயோகிப் பட்டிருக்கின்றன. இவர் செய்யுட்களிற் பாட்டை நிரப்பும் பயனைத்தவிர்த்து வேறு ஒருபயோகமுமில்லாத சொற்களைக் காணுதல் மிகவுமரிது. எதுகை, மோனைகளுக்காகச் சொற்களை விகாரப்படுத்தும் விகாரகுணமிவரிடமதிகமாகக் கிடையாது. வகையுளி, வனப்பின்மை முதலிய தோஷங்கள் இந்நூலிற்கிடையா. இத்தன்மையானசிறப்பெல்லாம் பற்றியல்லவா, சிலகாலத்திற்குமுன் இதினின்று மொருபாகமானது நமது சென்னைச்சர்வகலாசாலையில் பி. ஏ. பரீட்சைக்குப் பாடமாக நியமிக்கப்பட்டது மென்பது யாவர்க்குந் தெரிந்த விஷயம். இனிக்கடைசியாக நமக்கும் நம்முடைய தமிழ்ப்பாஷைக்கும்,வைத்தியநாத நாவலர் மூலமாக ஒரு கௌரவம் ஏற்படுகின்றது என்பது எமது துணிவு.

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி.

---

## இகபரசுகம்.

(தொடர்ச்சி.)

இவ்வுலகத்தில் இடைவிடாமல் இயற்கையாய் உண்டாகும் பற்பல சம்பவங்களை நாம் நன்றாய்க் கவனித்து, அவை எப்படி,என்ன காரணத்தால் உண்டாயிற்றென்று தீரயோசித்தால், அது இகபரசுகத்தையடைய வழிகாட்டுமென்று முதல்சஞ்சிகையில் சொன்னோம். இப்படி "தன் முயற்சியால் ஒருவர் சுகமடையலாம்" என்று சொல்வதால் என்ன அர்த்தங் கொண்டீர்கள்? இகசுகத்தைப்பற்றிப் பேசுங்கால், நாம் இனிமேல் சொல்லப்போகிற சில வழிகளில் நடப்பதாலும், சிலகாரியங்களை அப்பியசிப்பதாலும் ஒருவர் இவ்வுலகத்துள்ள அருமையான எல்லாவஸ்துக்களையும் ஒன்றாய்ப் பெறலாகுமென்று நினைத்தீர்களோ? அப்படி எல்லா வஸ்துக்களைப் பெறுவதிலும், ஏராளமாயும், நீடித்தகாலந்துக்கம் அனுபவிக்கும் சக்தியை யடையலாமென்று அர்த்தம் பண்ணிக்கொண்டீர்களோ? ஒருவன் அதியுன்னதபதவியும், நீடித்தவாழ்வும், கீர்த்திபுகழும், புத்திவிசாலமும், சத்கீர்த்தியும், புத்திரசம்பத்தும், மகத்தான செல்வமும், ஐம்புலன்களாலும் அனுபவிக்கக்கூடிய சகலவித சுக சம்போகங்களையும் ஒன்றாய் அடையக்கூடுமென்று நினைப்பது மதியீனமாகுமல்லவா? ஆகையால் நாம் இனிமேல் சொல்லப்போகும் மார்க்கத்தை அனுசரிப்பதால் ஒருவர், மனிதரின் சக்திக்கு மிஞ்சின காரியங்களைச் செய்யக்கூடு மென்றாவது, அப்பேர்ப்பட்ட பயனை யடையக்கூடுமென்றாவது நாமிங்கே சொல்லவில்லை; ஆனால் இவ்வுலகத்தில் ஒருவர் தம் வாழ்நாளுக்குள் தன்முயற்சியால் பெறக்கூடிய சுகபலன்களை அனுபவிக்கும் சக்தியை அடையக்கூடுமென்பதே நமது கருத்து. அப்படி ஒருவாறு சுகமனுபவிப்பதில், துக்கம் தினையளவும் அவர் வாழ்நாளில் எப்போதாவது இல்லாமற்போகுமோ? கிஞ்சித்து துக்கமும் கலந்திருக்குமாகில் அவர் சுகமனுபவித்தா ரென்று சொல்லலாமோ? என்னில், நாமிங்கே பிரஸ்தாபிக்கும் இகசுகம் அப்படித் துக்கம் கலந்ததுதான். ஒருவன் தன் வாழ்நாளில் அனுபவிக்கும் அனுபவங்களில் சுகத்துடன் துக்கமும் இடைக்கிடையே கலந்திருக்கும். சுகத்தைவிட ஒருவனுக்கு துக்கம் அதிகரித்திருந்தால் அவனை நிர்பாக்கிய னென்றும், துக்கம் கொஞ்சமாயும் சுகம்அதிகப்பட்டுமிருந்தால் அவனை பாக்கியவானென்றும் சொல்லுகிறோம். இப்படியன்றி, துக்கம் கலவாத சுகம் இவ்வுலகத்திலில்லை.

மேலும் அப்படித்துக்கம் சற்று கலந்திருக்கவேண்டுமென்பது ஒருவாறு அவசியமாயிருக்கிறது; துக்கமின்ன தென்றறியாத ஒருவர் எப்பொழுதும் சுகத்தையே யனுபவித்துக்கொண்டிருந்தால், அந்தச் சுகத்தினாலுண்டாகு மின்பத்தை யின்னதென்று உணரச் சக்தியற்றவராகிறார். எவ்விதமாக நிழலின் சுகம் வெயிலில் அலைந்தவர்களுக்குத் தெரியுமோ எப்பொழுதும் நிழலிலே இருப்பவர்களுக்குத் தெரியாதோ; அவ்விதமாகவே கிஞ்சித்து துக்கம் இடைக்கிடையே அடைந்து, அத்துடன் சுகத்தை யனுபவிப்பவருக்கே அச்சுகத்தின் இன்பம் தெரியும். இப்படி ஒருவர் தம் வாழ்நாளில் அதிக சுகத்தையும் கொஞ்ச துக்கத்தையும் அனுபவிப்பதையே, சுகமனுபவிப்பதாக நாம்

சொல்லுவது. இகசுகத்தை யடைய வழியிது வென்று கண்டுபிடிக்குமுன், இக சுக மென்று நாம் சொல்லிவருவது எது வென்று விசாரிப்போம். 'இகசுகத்தை நாம் அனுபவிக்கலாம்' என்பதின் தாத்பரியத்தை முன் விளக்கினோம். ஆனால் ஒருவன் இவ்வுலகத்தில் அடையவிரும்பும் சுகம் எது? அப்படிச் சுகத்தைக்கொடுக்கும் பொருட்களும் விஷயங்களும் எவ்வெவை? என விவரமாய்ச் சொல்லுவோம்.

"ஒருவன் சுகமடைந் திருக்கிறான்" என்று சொல்ல வேண்டுமானால், அவனுக்கு அவசியமாய் வேண்டியவைகளெவை யென்றால், **1. சரீரசுகம், 2. மனோரம்மியம், 3. தநந்தசம்பாத்தியம், 4. நன்குமதிப்பு, 5. நோயற்ற நன்மக்கள், 6. நீடித்த ஆயுள், 7. தெய்வபக்தி.**

1. சரீரசுகம்.

பலமான சரீரமும், நோயற்ற வாழ்வும் சரீரசுகத்தைக் கொடுக்கும். நோய்கொண்ட, பலவீனமான சரீரத்தை யுடைத்தா யிருந்தபோதிலும், அருமையான பலகாரியங்களை ஜனோபகாரமாகச் செய்து முடித்து, அப்படிச்செய்வதையே ஒரு சுகமாக எண்ணியும், தேகசௌக்கியத்தைச் சுகமாக எண்ணுமலு மிருப்பவர்களும் இவ்வுலகத்திலுண்டு. என்றாலும் அப்படி நினைப்பவர் வெகுசொற்பமே. ஆகையால் சுகமடைய விரும்பும் ஒவ்வொருவருக்கும் தேகசௌக்கியமும், தேகபலமும் இன்றியமையாதது. தேகசுகம் எப்படிப்பட்டதென்றால், தேகத்தின் ஒவ்வொரு அவயவமும் சீராயிருந்து, அதற்குரிய கிரியைகளை அல்லது கடமைகளை வருத்தமில்லாமல் செய்து வரும்போது இருக்கிற தேகஸ்திதியே. உதாரணமாக:—ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போவதிலும், சரீரத்தின் பற்பல உறுப்புகளை உபயோகிப்பதிலும், சற்றுவது வருத்தமும் இளைப்புமில்லாதிருத்தல்; உற்சாகத்துடனும் சுறுசுறுப்புடனும் வேலைசெய்தல்; வெகு நேரத்துக்கு விடாமல் வேலைசெய்யப் போதுமான தேகபலமும் சக்தியு முடைத்தாயிருத்தல்; மூளை, இரத்தாசயம், நுரையீரல், தீனிப்பை, குடல், நரம்பு முதலிய கருவிகள் அவற்றின் இயல்பான பலத்தை யுடையவைகளாய், சீராயும் ஒழுங்காயும் இருந்து, தம்தம் செய்கைகளைத் தட்டுத்தடையின்றிச் சரியாய்ச் செய்து வருவதால், இளைப்பு, தலைநோய், வயிற்றுவலி, அஜீரணம் இவைமுதலான எவ்வித வியாதியும் எப்படியிருக்குமோவென்று நினைக்கும்படியான சரீரத்தை யுடைத்தா யிருத்தல்; பசியுண்டாக வேண்டிய காலங்களில் உண்டாகாமலும், உண்டவுடன் பசியுண்டாதலும், இராக்காலங்களில் சரியான தூக்கமின்றி எப்போது விடியுமென்று எதிர்பார்த்திருப்பதும், இவைபோன்ற அசௌக்கியங்களில்லாதிருத்தலுமாம். மனிதரின் க்ஷேமத்துக்கு இவை யெல்லாம் எவ்வளவு முக்கியமான அம்சங்கள். தேகசௌக்கியமில்லா விட்டால் மனதில் சந்தோஷ மில்லை; சரியாய் வேலைசெய்வதில்லை; நற்காரியங்களைப் பற்றிய நினைப்பில்லை; சதா சரீரத்தைப் பற்றியும் வியாதியைப்பற்றியும், மருந்துகளைப்பற்றியும், உணவைப்பற்றியுமே சிந்தனை யுண்டாகும். ஆனால், சுக சரீரமுடையவர்களுக்கோ அப்படியல்ல. அவர்கள் நோயாளிகளைப்போல 'தேகம் துர்ப்பலமா யிருக்கிறதே! இதை பலப்படுத்த என்னசெய்யலாம்? இதை நன்றாய்ப் போஷிக்கவேண்டுமே' யென்ற எண்ணமே யில்லாமல் உற்சாகத்துடன் அன்றாடம் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து கொண்டிருப்பார்கள்.

2-வது. மனோரம்மியம்.

சரீரசுகத்துக்குப் பின் ஒருவருக்கு முக்கியமாய் வேண்டியது சமாதானம். அப்படி மனதினிடத்துச் சமாதான மடைந் திருக்கிறோம் என்னும் அறிவு சந்தோஷமாகும். இதை ஒருவர் அடைந்திருக்கிறார் என்று சொல்ல வேண்டுமானால் அவருக்குத் துக்கமும், கவலையும், நாளாவர்த்தியில் மனதை யுருக்கும். நிராவிசாரமும் கூடா: "இன்றைக்கு என்மனம் ஏதோஒருவிதமாயிருக்கிறது; ஒன்றும் தோன்றவில்லை; யாதொரு வேலைசெய்யவும் மனம் நாடவில்லை," என்றுசிலர் சொல்வதுபோல், மனமானது காரண மில்லாமலே தடுமாற்றங் கொள்ளவும் கூடாது. இப்படிச்சஞ்சலம், விசாரமுதலியவற்றால் மனம் அடிக்கடி பேதிக்கப்பட்டால் நம்மால் ஒரு காரியத்தையும் செய்யமுடியாது. எதைச்செய்ய ஆரம்பித்தபோதிலும் திகைப்புண்டாகும். வரவர மனதின் வலிமை குறை

ந்துபோம். பின் அடையவேண்டிய நன்மைகளுக்காக முன்னமே உற்சாகத்துடன் உழைத்துவரும் உழைப்பு நின்றுபோம். இப்போதிருப்பதைவிடச் சற்று உயர்ந்த பதவியடைய வேண்டுமென்னும் ஆவல் தோன்றாமலே மறைந்துவிடும். இரண்டு விஷயங்களை எடுத்துக்கொண்டு அவைகளின் உயர்வுதாழ்வுகளை மனதினால் ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்க்கும் சக்தி குறைவடையும். சில விஷயங்களை யோசிக்கையில் காரணமொன்றுமில்லாமலே பயமுண்டாகும். இப்படிப்பேதமடைந்த மனத்தையுடைய ஒருவன் உலகத்தில் எதற்கு உதவுவான்? இன்பமாய்க் காலங்கழிப்பது அவனுக்குக் கூடாத காரியமாகும். அவன்மனதின் பிரகாசம் மங்கி, அறிவின் ஒளி மழுங்கிப்போம். அழகும் சிங்காரமும் அமைந்த மனோரம்மியமான பற்பல பொருட்களைப்பற்றி தியானிக்கும் ஸ்திதியை விட்டு, மனமானது மந்தபுத்தியாகவும், வெறுமையாயும், பிரயோஜனமற்றதாகவும் மாறிவிடும். ஒருவன் இகத்தில் சுகமடைய வேண்டுமானால், அவனுக்கு இவ்வுலகம் பிரகாசமான அரண்மனைபோல் குதூகலத்தைக் கொடுக்கத் தக்கதாயிருக்கவேண்டுமேயன்றி, அந்தகாரமான ஓர் அறையைப்போல் அலங்கோலமாய்க் காணப்படக்கூடாது. இடைக்கிடையே துக்கத்தை யுண்டாக்கும் சம்பவங்கள் ஒருவருக்குண்டாவதுசகஜம்; என்றாலும் உடனே யவைகளை மறந்து மனம் ரம்மியப்பட்டுச்சந்தோஷமடையும்படியான ஸ்திதியில் இருத்தல் விசேஷம். வேலை மிகுதியால் அலுப்படைந்த ஒருவன் அந்நேரத்தில் அழகான ஓர் பூஞ்சோலையிற் சென்றால், அவன் களிப்புமாறிச் சந்தோஷம் எப்படி யுண்டாகுமோ, அதேவிதமாய்ச் சிலகாரணங்களால் மனிதர் மனத்துயரடைந்தபோதிலும் மற்றும் சிலகாரணங்களால் சமாதானமடைந்து சந்தோஷத்துடன் ஜீவிக்கும்படியான ஸ்திதியில் அவர்மன மிருக்கவேண்டும்; இப்படி யில்லாவிட்டால் இகசுகத்தை நாம் அனுபவிக்க முடியாது.

### 3-வது. தகுந்த சம்பாத்தியம்.

இகசுகத்துக்கு அவசியமான விஷயங்களில் இது ஒன்று. 'தகுந்த சம்பாத்தியம்' என்றால் ஒருவருக்கு அவசியமாய் வேண்டிய ஜீவனும்ஸம். ஒவ்வொருவருக்கும் மிதமிஞ்சிய செல்வமிருந்தாலன்றி அவருக்குச் சுகம் கிடையாதென்று நாம் சொல்லவரவில்லை. இவ்வுலகத்தில் எல்லாருக்கும் ஓரேமட்டான செல்வமும் ஜீவனமும் கிடைப்பது கூடாமையாகும்; உயர்வு, தாழ்வு; எஜமான், வேலைக்காரன்; பணக்காரன், எளியன்; புத்தியால் வேலை செய்பவன், சரீரப்பிரயாசையால் வேலைசெய்பவன் இப்படிப்பட்ட பேதங்கள் எப்போது மிருக்கவேயிருக்கும். ஆகையால் அவரவர் அந்தஸ்துக்கும், அவரவர் குடும்ப சம்ரக்ஷணைக்கும் தக்கதான ஐசுவரியமாவது சம்பாத்தியமாவது ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டுமென்பதே நம்முடைய துணிபு. 'சம்பாத்திய மில்லாதவன் சாகவேண்டும்'' என்று உலகத்தில் பழமொழியாய் வழங்கி வருகிறதல்லவா? சம்பாத்திய மில்லையாயின் இகசுகத்தை ஒருவன் அடைவது அசாத்தியம். முதலில் சரீரசுகம் கிடையாது; வறுமைவந்து சேரும்; வறுமையோ மிகவும் கொடியது.

"இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே இன்னா தது.*''

என்று நாயனார் சொல்லியிருக்கிறார். ஒருவருக்குத்தரித்திரத்தைப்போல் துன்பம் விளைப்பது யாதெனில் வேறொன்றுமில்லை: இவ்விஷயத்தில் வேறொன்றையும் தரித்திரத்துக்குச் சமானமாகச் சொல்லக்கூடாது. அதற்கு ஒப்பில்லையென்று சொல்லும்போது, அதிலும் அதிகப்பட்டது ஒன்றுமில்லை எனச் சொல்லுவது அனுவசியம்.

"இப்போது உண்பதற்குப்போதுமான உணவில்லை! நாளை யென்ன செய்வது? முன் வாங்கின கடனைத் தீர்ப்பதெப்படி? இனிப் பிழைத்திருக்க வகை யெங்கே!!'' என்னும் தீராக்கவலை அவர்கள் ஊனை உருக்கி உடம்பைத் தின்றுவிடும். அதையொட்டியே நாயனார்,

"இன்றும் வருவது கொல்லோ, நெருநலும்,
கொன்றது போலும் [2]நிரப்பு.''

* [இன்னாதது=துன்பஞ்செய்வது.] ஒருவனுக்கு வறுமைபோல வின்னாதது யாதென்று வினவின், வறுமைபோல இன்னாதது வறுமையே. பரிமேலழகர்.

[1]. நேற்றும். 2. வறுமை.

எனப் பாடினர். நேற்று வயிறு நிறைப்பதற்கு மிகவருந்திய ஒருவன், "என்னைக் கொன்றது போல் அவ்வளவு துன்பங்கள் செய்தவறுமை யானது இன்றும் என்னிடத்தில் வந்து விடுமோ? அப்படி வந்தால் என்னசெய்வது" என்னும் துயரத்தில் அழுந்தி, மனம் கசந்து துக்கிப்பான். ஒருவன் வறுமையுற்ற காலத்தில் சுற்றத்தாரும் சினேகிதரும் அவனைக் கைவிடுவர். அழுக்கு வஸ்திரங்களும், அசங்கியமான படுக்கையும், அசுத்தமான சரீரமும் (வேறுவித மிருக்கக் கூடாமையால்) அசுசியானபழக்கமும், அலங்கோல வாழ்வும் அவனுக்கு விதித்த விதியென நினைத்துத் தன்னைப்படைத்த கடவுளைத் தூஷிக்கிறான்.

மேலும் அவன் செல்வரைக் காணும்போதும், அவர் வீட்டினருகே செல்லும்போதும், அவரிடத்துத் தன் குறைகளைச் சொல்லும் போதும், அவரிடத்து உணவு கேட்கும்போதும், அப்படிக் கேட்டவுடன் கொடாதிருந்த போதும், கொடுக்கமாட்டோ மென்று மறுத்த போதும், வறுமையுற்றவருக்குண்டாகும் துன்பஞ் சொல்லமுடியாது. இரவில் தூக்கம் என்பதே அத் துற்பாக்கியர்களுக்கு இல்லாமற் போகும்.

"நெருப்பினுள் துஞ்சலு[1] மாகும்,
நிரப்பினுள்[2] யாதொன்றும் கண்பா[3] டரிது."

மந்திரம், மருந்து முதலியவைகளால் தீயின் மேற் படுத்துத் தூங்குவது ஒருக்கால் கூடும். ஆனல் வறுமைவந்த விடத்து எவ்விதப் பிரயோகத்தாலும் தூங்குதல் கூடாமையாம் இதன்றி, தகுந்த ஜீவனமுள்ள பிறரைப்பார்த்து அவரைத் தன்னுடன் ஒப்பிட்டு, அவர் அடைந்த செல்வம் தனக்கு மிருந்தால் தானிப்படித் துன்பமடைய வேண்டிய தில்லை யென்று தேர்ந்து, அவரைப்போல் சமபாதிக்கும் வழிகளில் தனக்குப் பயிற்சியும் பாண்டித்தியமு மில்லாத தால் வேறெவ்விதத்திலாயினும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்னும் பேராசை அவன் பிடரியைப் பிடித்துத்தள்ள, அவன் உலகத்தின் விஷயங்களில் அனுபோகம் மெத்தவில்லாத சிலரிடத்திற்போய் "இந்தவேலை செய்கிறேன்; இப்பொருளைச் செப்பனிடுவதில் எனக்கப்பால் தான் மற்றவர்கள்; நான் வெகு சமர்த்தன்; நேற்றுத்தனக்கோடி முதலியாருக்கு இன்னின்னபொருட்களைச்செய்து கொடுத்தேன்" என்று சொல்லி அவரை ஏமாற்றிப் பணம்வாங்கிச்செலவழித்து; அதன்பின் வெகுநாட்சென்று 'வேலையெங்கே' யென்று கேட்டால், "இதோ முடிந்துவிட்டது, இன்னுமிரண்டுதினத்தில். கொடுத்து விடுகிறேன்; அசலூருக்குப் போயிருந்தேன்; அதனல் தான் சற்றுத் தாமசமாயிற்று" என்று போக்குச்சொல்லிப் புரட்டுசெய்து பிறரைவஞ்சித்து நாள் கழிக்கிறான். இதெல்லாம் வறுமையாலன்றோ?

இப்படிச் செய்யாமல் மரியாதையாய்க் காலங்கழிக்க வெண்ணியிருக்கும் சிலர் கடன் வாங்கியுண்டு, அப்பால் அக்கடனைத்தீர்க்க வகையில்லாதபோது, மனங்கலங்கி வருந்துவார்கள். இராம ராவண யுத்தத்தில் இராவணனைச் சேர்ந்தசேனைகள் சுற்றத்தார் சகலரும் மடிந்துபோகத் தனித்து நின்றபோது, அவன் மனதின் ஸ்திதியை கம்பர் "கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினன் இலங்கை வேந்தன்" என்று கடன் பட்டாருடைய நெஞ்சத்துக்கு ஒப்பிட்டார். ஆகையால் கடன்பட்டார் நெஞ்சம் என்ன ஸ்திதியிலிருக்கும் என்பது விளங்கிற்று.

'நாய்க்குப் பசியுண்டானல் அடைத்த கதவையுந் தள்ளித்திறந்து வீட்டுக்குள் நுழைந்து அங்கு வைத்திருக்கும் உணவைத் தின்னும்; அப்படி யிருக்க அறிவும் தந்திரமுமுள்ள மனிதருக்குப் பசியதிகரித்தால் அவர்கள் என்ன தான் செய்யார்கள்!' என இங்கிலீஷில் ஒருபழமொழியுண்டு. அதன்படி வறுமைப் பட்டவர்களில் கீழானோர் பிறர்பொருளை அபகரிக்கவும், அதற்குத் தடை யேதேனுமிருந்தால் அத்தடைகளை நிவர்த்திப்பதில் கொலை முதலான கொடுந்தொழில் செய்யவும் துணிவு கொள்ளுகிறார்கள். இப்படிச்செய்ய அவர்களைத்தூண்டுவது தக்க சம்பாத்திய மின்மையல்லவா? சம்பாத்தியமுள்ள ஒருவர் சொல்லவும், திருடவும், வாக்குப்பிசகு செய்யவும், சாதாரணமாய் நாம் காண்பதில்லை. ஏனென்றால் குற்றங்களைச் செய்யவேண்டிய அவசியமும் சந்தர்ப்ப

1. தூக்குதல், 2. வறுமையில், 3. நித்திரை,

மும் அவர்களுக்கில்லை. ஒருவேளை அப்படிச் செய்வார்களாகில், அவர்கள் அந்தஸ்துக்கும் கௌரவத்துக்கும் இழிவுண்டாகும். அப்படி யுண்டாகாமற் காப்பதற்கே சிலர் பொய் சொல்லல் முதலிய குற்றங்களைச் செய்யாதிருக்கலாம். ஆனால் கைப்பொருளற்ற வறிஞர் அக் குற்றங்களைச் செய்யவேண்டிய காரணங்களும் சந்தர்ப்பங்களும் இருக்கின்றன வாதலால் அவைகளைத் தவிர்த்து நிற்பது அசாத்திய மாகின்றது. ஆதலால் அவர்கள் சுகமனுபவிப்பதில்லை. இதன்பொருட்டே நாயனர் ஒருவரிடத்தில் வறுமையாகிய பாவி வந்து சேருவானாகில், அவருக்கு இம்மைச் சுகத்தையும் மறுமைச் சுகத்தையும் இல்லாமற் செய்யவே வருவான் என்னும் பொருள்தர,

"இன்மை யெனஒரு பாவி, மறுமையும்
இம்மையும் இன்றி வரும்."

எனச்சொல்லி யிருக்கிறார்.

(இன்னும் வரும்.)

J. D. R.

## மனோன்மணீயம். III.

இன்னும் ஒருநாள், அதாவது போர் நடந்த நாள், கதை யிருக்கிறது. காலையில், பாண்டியன் படைகளைச் சேனாதிபதியாகிய பலதேவன் அணிவகுத்து நிற்க, குடிலன், களத்தில் ஓர்புறம் நின்று அரசனை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கும்பொழுது, அன்று மாள்பவர்க்காகவும், அவர் சாதலினால்

"மடவுள்
இட்டகல்லாலெழும் வட்டமாம் விரிதிரை
வரவரப்பெரிதாய்க் கரைவரைவரல்போல்,*
நின்றவிவ்வீரரை யொன்றியமனைவியர்
உற்றார்பெற்றார் நட்டாரென்றிப்
படியே பரவும்"

துயரத்தைப் பற்றியும், அவன் மனதில் இரக்கம் பிறந்தது. அவ்விரக்கத்தைக் கூடிய சீக்கிரத்திற் பொய்முகாந்தரங்களால் அவித்தானவுடன், ஜீவகன் வந்து சேர்ந்தான். வந்த அரசனுக்கு நாற்படைகளையும் வருணித்துக்காட்ட, அவன் மனமகிழ்ந்து போர் வீரரை யுற்சாகப்படுத்தத் தொடங்கினான். அவன் மொழிகளிலிருந்து சிலபாக்களை வரைவோம்:—

"தாயினுஞ் சிறந்த தயாபூண் டிருந்த
தேயமாந் தேவிக்குத் தீவினை யிழைக்கத்
துணிந்த இவ்வஞ்சரை யெணுந்தோறு மெணுந்தோறும்
அகந்தனி லடக்கியு மடங்கா தெழுந்து,
புகைந்துயிர்ப் பெறியப் பொறிகண் பொறிய
நெடுந்திரட் புருவங் கொடுந்தொழில் குறிப்ப
வளங்கெழு மீசையுங் கிளர்ந்தெழுந் தாடக்
களங்கமில் நம்முகங் காட்டுமிச் சினத்தீ
கண்டப் பாண்டியே கொண்டனள் உவகை.
* * * * *
பழையோர் பெருமையுங் கிழமையுங் கீர்த்தியு
மன்னிய அன்பிலும் அன்னையர்பாடி
நித்திரைவரும் வகை யொத்தறுத் துமது
தொட்டில்தாலாட்ட, அவ்விட்டமா முன்னோர்
தீரமுஞ் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணுங் கண்ணீர் நிறையக்
கண் துயிலாது நீர் கனிவுடன் கேட்ட
வண்தமிழ் மொழியான் மறித்திக்காலம்
'ஆற்றிலம்; ஆண்மையம் உரிமையு மொருங்கே
தோற்றனம்' எனச்சொலத் துணிபவர் யாவர்.
* * * * *
அந்தணர் வளர்க்குஞ் செந்தழல் தன்னிலும்
நாட்டபிமானம் உள் மூட்டிய சினத்தீ
யன்றோ வானோர்க் கென்றுமே யுவப்பு.
* * * * *
இத்தனிப்போரில் நீரேற்றிடும் காயஞ்,
சித்தங்களித்து, ஐயமா துமக்கு
முத்தமிட்டளித்த முத்திரையாகி
யெத்தனை தலைமுறைக் கிலக்காய் நிற்கும்.
* * * ஐயோ! அதுவும்
புண்ணோ? புகழின் கண்ணே. எவரே
புண்படா துலகிற் புகழுடம்பு அடைந்தார்?"

தன் படைகளுடன் சம்பாஷித்தானபின் ஜீவகன் போர்க்களத்துக் கெழுந்தான்.

நாராயணன் அரசன் பேரில் மெய்யன்புடையவனெனக் கூறினோம். அவ்வீரன் போர்க்களத்துக்கு வரின், அரசனை யவ்விடத்தில் கொல்லமுயலவேண்டுமென்ற தன் எண்ணத்திற்குத் தடை யுண்டாமெனக்கருதி, குடிலன், அவனையும் வெற்றியை யடையக்கூடிய அநேக வீரர்களையும், கோட்டையைக் காத்துக்கொண்டிருக்கும்படி யேற்படுத்தி யிருந்தான். நாராயணன் அவன் கருத்தையறிந்து போரை யுற்றுப்பார்த்துக் கொண்டிருக்கையில், அரசன் அபாயத்துக்குள்ளா யிருப்பதைக்கண்டு, உடனே காவல் வீரருடன் போர்க்களத்துட் சென்று, அரசனை மரணத்தினின்றுந் தப்புவித்தான்.

போர்க்களத்தினின்றும் அரண்மனைக்குட் கொண்டுவரப்பட்ட ஜீவகன், தன்தோல்வியை நினைந்து

* Compare : Tennyson's Pelleas and Etarre' ll 89-90.

சோகமுற்று, விழுந்து, பின்பு எழுந்து தன்னைத்தானே நொந்துகொண்டு இறக்கத் துணிந்து வாளையுருவுந் தருணத்தில்:—

நாராயணன், மனோன்மணி தன்னை மறந்தாய் போலும்!
ஜீவகன், குழந்தாய்! குழந்தாய்!—(விழுந்து மூர்ச்சிக்க)
சேவகர், கொற்றவ! கொற்றவா!
நாரா, பேசன்மின்!
முதற்சே, பேசன்மின்!
நாரா, வீசுமின்! அகன்மின்!
முதற்சே, வெளியே!
௨-ம் சே, பனிநீர்
நாரா, தெளி நீ சிறிது!
ஜீவ, குழந்தாய்! குழந்தாய்! கொன்றேன் நின்சீர்!
(எழுந்து சோர்வாயிருக்க.)
நாரா, இழந்தால் இருப்பளோ? என்செயத் துணிந்தாய்?
ஜீவ, நஞ்சேயெனக்கியான்! என்செய்வேனினி!
இருதலைக்கொள்ளியில் எறும்பானேனே!
செருமுகத் திரிந்தேன் மானஞ் செகுத்தும்
உயிரினை யோம்பவோ வுற்றது? ஓர்சிறு
மயிரினை யிழக்கினும் மாயுமேகவரிமா!
பெருந்தகை பிரிந்தும் ஊன் சுமக்கும் பெற்றி
மருந்தா யெனக்கே யிருந்ததே நாரணா!''

*

ஜீவகனை நாராயணன் தேற்றிக்கொண்டிருக்குந் தருணத்தில், குடிலனும் பலதேவனும் வந்து சேர்ந்தார்கள். குடிலனுடைய பாசாங்குகளைக்கண்ட மாத்திரத்தில் நம்மனத்தில் எழும் கோபம், அரசனுடைய சுத்த குணத்தைப்பற்றியோசிக்கும் பொழுது, நெய் வார்க்கப்பெற்ற நெருப்பைப்போல், அகோரமாய் வளருகிறது.

பலதேவன், தூதுபோகுமுன், ஒரு பொற்றொடியைத் தன்னாற் கெடுக்கப்பட்ட ஓர் மாதுக்குக் கொடுத்துச் சென்றதாகக் கூறினோம். அம்மாதின் சகோதரனாகிய ஓர் போர்வீரன், தன் தங்கைக்காக மனம் வருந்திப் போர்க்களத்தில் அப் பாற்றொடியைக் காட்டிப் பலதேவனை வேலால் மார்பிற் குத்தினான். இதனாலுண்டான உள்கலகமானது, பாண்டியன் அபஜெயத்துக்கு ஓர் முக்கியகாரணமாயிருந்தது. ஆனால் இவ்விஷயம் அரசனுக்குத் தெரியாது. இது நிற்க, தான்கருதியவற்றைப் பலவாற்றானும் கெடுக்கும் நாராயணன் பேரில் அடங்காக் கோபங்கொண்டகுடிலன் பலதேவன் மார்பிற் குத்தப்பட்டது நாராயணனுடைய ஏவலாலென்றும், நாராயணன் கோட்டைக்காவலைவிட்டுப் போர்க்களத்துக்கு வராதிருந்திருப்பானாயின் அவ்வளவு தோல்வி நேரிட்டிராதென்றும், இவையெல்லாம் குடிலன் பேரிலுள்ள விரோதத்தினால் தூண்டப்பட்டு நாராயணன் செய்தனனென்றும், பலவிதமாக அரசனுக்கு வெகுசாதுரியமாய்ப்போதித்து, 'எடுப்பார் கைப்பிள்ளை'யாகிய அரசனிடமிருந்து, நாராயணனைச் சிறையிலடைத்துப் பிற்பாடு கழுவேற்றிவிடும்படி கட்டளைபெற்றுக்கொண்டான். இதைக்கண்டு முறுமுறுத்துக் குடிலனையெதிர்க்கத்தொடங்கின போர்வீரர் அடங்கினதும், குடிலன் அவர் கையினின்று தப்பித்ததும், சத்தியவந்தனாகிய நாராயணன் மூலமாயே யொழிய வேறில்லை. இதற்கு ஊடே, சேரனிடத்திருந்து ஒரு குடம் தாமிரவருணி நீரையும் வேப்பமாலையையும் சமாதானக் கப்பமாகவேண்டி வந்த தூதனையும், தன் உண்மை நிலையையறியாத ஜீவகன், மறுபடியும் போர்புரிந்து வெற்றியடையலாமென்றெண்ணித் துரத்திவிட்டான்.

நாராயணன் துரோகஞ்செய்கிறானென்ப… சொல்லும்பொழுது, இவன்

"வேலியே…ன்னில்
தெய்வமே காவல்செய்பயிர்க்கு"

என்று தான் கூறினமொழி, தனக்கே முற்றிலும் பொருந்தும்படி ஒழுகும் குடிலனுடைய செய்கைகள், தன் குடும்பத்தை இராஜகுடும்பமாக்கும்பொருட்டிருக்கலாமென்று சிலர் நினைப்பார்கள். அவ்வெண்ணம் அவன் செய்கைகளை நியாயப்படுத்தாமற்போனாலும், உலகத்தில் வெகு சாதாரணமாயிருப்பதுபற்றி, அதின்மட்டிலும் முற்றிலும் இகழத்தக்கதல்ல. நாலாம் அங்கம் மூன்றாம் களமுடிவை வாசித்தால், அவ்வெண்ணத்துக்கும் இடையில்லை: தன் பேராசையே மூலகாரணம்: என்பது விளங்கி, அவன் குணம் முன்னிலும் பதின்மடங்கு பாழாகத்தோற்றும்.

மாலையில், சுந்தரமுனிவர், தக்ககாலத்தில் திருநெல்வேலியைவிட்டுப் போம்படி ஜீவனுக்குப்போதித்தும் அவன் இணங்கானாக; மனோன்மணியையாவது தன்னுடன், தானியற்றிய சுருங்கை வழியாய்த் தன்னுடனனுப்பும்படி கேட்டனர். அரசன் மனமகிழ்ந்திசைந்து, அவர் அங்ஙனஞ்செய்யில்,

"இந்துவின் குலமெனும் முந்திய பேர்போய்ச்
சுந்தரன் குலமெனச் சந்ததம் வழங்கும்"

என்று போற்ற, அவர் நடுநிசியில் வருவதாகச்சொல்லிப்போயினர். பிற்பாடு ஜீவகன் மனோன்மணியைப் பிரிந்திருப்பதைப்பற்றி விசனப்பட்டுக்கொண்டிருக்கையில், சுந்தரமுனிவரைப்பற்றிச் சந்தேகம் பிறக்கக், குடிலனையழைத்து, நிகழ்ந்தவற்றைக் கூறி, அவன் கருத்தென்னவென்று வினவினான். குடிலன், அந்நியருடன் கன்னியாயிரவிலனுப்புதல்

சரியோவென்று சாதுரியமாய்ச் சந்தேகித்து, அப்படிச்செய்யினும் கவலையதிகரிக்குமேயொழியக் குறையாதென்றுகூற, அரசன் அதையும் ஒத்துக்கொண்டு திகைத்தான். குடிலன் வேந்தர்குலத்தில் விவாகம் நடப்பதிலுண்டான கஷ்டங்களை விவரித்து அவன் திகைப்பை யதிகரித்தான். அதுகண்டு "அரசல வெனின் நமக்காம் பிழையென்னை?" யென்று ஜீவகன் கூறினவுடன், குடிலன் வெகு தந்திரமாய் ஜீவகன் 'அடிச்சேவகத்தைப் புகழ்ந்து, அன்றிரவு, மனோன்மணியைப் பலதேவனுக்கு விவாகஞ்செய்து விடும்படி அரசன் கட்டளையைப்பெற்றுக்கொண்டான். சமயத்துக்குத்தக்கபடி சுயநயத்தைத்தேடிக்கொள்ளும் குடிலனுடைய மதி வியக்கத்தக்கதே. பின்வரும் தனிமொழியில் குடிலனுடைய மனத்தின் இரக்கமில் தன்மையும், ஒவ்வோர் அறைக்கும் இரண்டு திறவுகோல் செய்து பணந்திருடும் திருட்டுத்தனமும் வெளிப்படுகின்றன. பிற்பாடு குடிலன் சுருங்கையைத்தேடிச் செல்கிறான்.

(இன்னும்வரும்.)

அ. மாதவய்யர்.

———o———

## சாவித்திரி சரித்திரம்.

### ஐந்தாவது அதிகாரம்.

என்தகப்பனார் கடிதம்வந்தவுடன் நான் படிப்பை நிறுத்தவில்லை. அவரெழுதியதைப்பற்றி எனக்கு இருந்ததைப் பார்க்கிலும் நடேசனுக்குவிசனம் அதிகமாகவே இருந்தது. படிப்புவருகிற சமயத்தில் நிறுத்திவிட்டால் பிற்பாடு எல்லாம் மறந்துபோமென்று அவன் சொன்னான். கோபாலன் உடனே படிப்பை நிறுத்திவிட வேண்டுமென்று சொன்னபோதிலும், நடேசன் அவனுக்குப் போதித்து, என்தகப்பனாருக்குச் சரியானபடி கடிதமெழுதி அவருடைய சம்மதத்தைப் பெற்றுக்கொள்ளலாமென்று சொல்லி, எனக்கு வழக்கம்போல் படிப்புச் சொல்லிக்கொடுத்துக் கொண்டு வந்தான். நாங்கள் ஒருவாரத்திற்குப் பிற்பாடு என் தகப்பனாருக்குக் கடிதங்களெழுதினோம். கோபாலன் எழுதிய கடிதத்தில் நான் கொஞ்சம் எழுதினேன். என் தகப்பனாருக்குத் தெரியாதபோதிலும், நடேசனும் அவருக்கு ஒருகடித மெழுதினான். அவன் எழுதியது அந்தச்சமயத்தில்எங்களுக்குத்தெரியாது. பிற்பாடுதான் நாங்கள் அறிந்தோம். அந்தக்கடிதங்கள் இரண்டையும் கீழேவரைகிறேன்:—

1. கோபாலன் கடிதம்.

திருநெல்வேலி
ஆவணிமீ 11வ.

ஸ்ரீமது அப்பா அவர்களுடைய திவ்யஸ்ரீ பாதபத்மங்களிலே குழந்தை கோபு சாஷ்டாங்க பூர்வீகமாக நமஸ்கரித்த விஞ்ஞாபனம். இவ்விடத்தில் சாவித்திரி, அத்தை முதலியயாவரும் க்ஷேமம். அவ்விடத்தில் தாங்கள் க்ஷேமமாயிருக்கிற விபரத்துக்கு எழுதியனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

தாங்களெழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. இப்பொழுது 20ரூபா வேண்டியதில்லை. இந்த மாதத்தில் 15ரூபா அனுப்பினால் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம். எனக்கு எப். ஏ. பரீக்ஷை இந்த வருஷமில்லை. அடுத்த வருஷம்தான் பணம் கட்டவேண்டும். நான் சிரத்தையாய் வாசித்துக்கொண்டு வருகிறேன். தேகத்தைச்சௌக்கியமாய்ப்பார்த்துக்கொள்ளுகிறேன். தாங்கள் உண்டியல் அனுப்புவதை இராவுத்தர் கடைக்கு அனுப்பிவிட்டால் நான் பெற்றுக்கொள்ளுகிறேன்.

தாங்கள் சாவித்திரி படிப்பைப்பற்றி யெழுதினதைக் கேட்டு அவள் மிகவும் விசனப்படுகிறாள். அவள் படிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டதினால் நானும் நடேசனும் அவளுக்குச்சொல்லிக்கொடுக்கத் தொடங்கினோம். தங்களைக் கேளாமல் அப்படிச்செய்ததைத்தயவுசெய்து மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் படிப்பு நிறுத்தவில்லை. அவளே இதன்கீழ் எழுதுகிறாள்.

தாங்கள் நடேசனைப்பற்றி யெழுதி யிருந்தீர்கள். அவனுக்கு மதுரை. அவன் தமையனார் இவ்விடத்தில் நூறுரூபா சம்பளமுள்ள கச்சேரி உத்தியோகத்திலிருப்பதால் அவன் இரண்டு வருஷமாய் இவ்விடத்தில்வாசித்துக்கொண்டிருக்கிறான். அவன்தான் என்னுடையமுக்கிய இஷ்டன். எங்கள் வகுப்பில் முதலாவது பையனாயிருக்கிறான். அவன்பந்துக்களில் அநேகர் உயர்ந்த சர்க்கார் வேலைகளி லிருக்கிறார்களாம். நானும் அவனும் ஒன்றாய்ப்படித்துக்கொண்டு வருகிறோம். வேறுவிசேஷமில்லை.

இப்படிக்கு
தங்கள் பணிவும் அன்புமுள்ள
குழந்தை
கோபாலன்.

என்நோ டஅப்பாக்கு னம ஸ்காரம்பன் னறேன் னீ, ற்யெழுதிந காகிதம்வ ந்து தியெ னக்கு ரொம் ப விஸந மாயிருக்கு யெநக்கு வாசிக்க ஆசை யா இருக்குநா ந் கெட்டுப் போகமா ட்டேன்னீற் சம்மதிக் கனம் யெனக்கு யிதை யெழு தரபோ துஅழுகைவ ரது.

உம்மோடகு
ழந்தைசா
வித்திரி.

2. நடேசன் கடிதம்.

ஸ்ரீமது மாமா அவர்களுக்கு அநேக நமஸ்காரம். இவ்விடத்தில் யாவரும் க்ஷேமம். தங்கள் க்ஷேமத்துக்கு எழுதியனுப்பக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தக் கடிதத்தைப் பார்க்க தங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும். தங்கள் குமாரன் கோபாலன் எழுதியிருப்பதால் என்னைப்பற்றி நான் ஒன்றும் விசேஷமாய்ச் சொல்லவேண்டிய தில்லை. தங்கள் கடிதத்தை கோபாலன் காட்டினவுடன் எனக்கு மிகவும் விசனமாயிருந்தது. நான் அந்தவிஷயத்தைப்பற்றி என் தமையனாரவர்களிடத்திற் சொன்னேன். சாவித்திரி முக்கியமாய் என்னால் படிக்க ஆரம்பித்ததினாலும், அதனால் தங்களுக்கு விசனமுண்டானதினாலும், நான் தங்களிடத்தில் மன்னிப்புக்கேட்டுக்கொள்ளவேண்டுமென்று அவர்கள்சொன்னார்கள். அதன்பேரில் இந்தக்கடிதம் எழுதலானேன். நானிது எழுதுவது கோபாலன் சாவித்திரி முதலியவர்களுக்குத் தெரியாது. தாங்கள் என்னை மன்னிக்கும்படி வணக்கமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

நான் கொஞ்சமும் பாத்தியப் படாதவனாயிருந்த போதிலும், இன்னும் ஒரு விஷயம்கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். சாவித்திரி படிப்பதை தாங்கள் தடுக்காமலிருக்கும் படி கேட்டுக்கொள்ளுகிறேன். அவளுடைய புத்திசாலித்தனத்தையும் படிப்பின் பேரிலுள்ள ஆசையையும் பார்த்துத்தான் நான் படிப்புச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினேன். அதைப்பற்றித் தாங்கள் கோபாலன் பேரில் கோபித்துக் கொள்ளவேண்டாம். என் பேரில் தான் கோபித்துக் கொள்ள வேண்டும். என் சகோதரிகள் மதுரையில் படிப்பது போலவே சாவித்திரிக்கும் படிப்புச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தேன். பிற்பாடு தங்கள் இஷ்டம். தங்களுக்குத் தெரியாத தில்லை. அவளுக்குப் படிப்பின் மேலிருக்கும் ஆசையைப் பார்த்தால் நீங்களே சொல்லிக்கொடுப்பீர்களென்பது நிச்சயம். நான் கோபாலனுடனும் சாவித்திரியுடனும் அதிகமாய்ப்பழகி விட்டதால் இவ்வளவு சொல்ல நேரிட்டது. நான் ஏதாவது பிழைசெய் திருந்தால் பொறுத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு

திருநெல்வேலி ஆவணிமீ 12உ. } தங்கள் பணிவுள்ள நடேசன்.

நாங்கள் கடிதமெழுதி யொருவாரத்துக்குள், என் னிஷ்டப்படி வாசிக்கும்படி என் தகப்பனார் பதிலெழுதிவிட்டார். அவர்கடிதத்தில் நடேசன் கடிதத்தைப்பற்றி யெழுதியிருந்தபடியால், நான் அவன் வந்தவுடன் அதைப்பற்றிக் கேட்டேன். அவன் பதிற் சொன்னதாவது:—"ஆமாம், பெண்டாட்டி! நானும் ஒருகடிதம் எழுதினேன். ஒருவேடிக்கை கேள். முதலில் எழுதினகடிதத்தில் உன் பெயர்வரும்பொழுது 'பெண்டாட்டி' யென்று எழுதிவிட்டேன், பிற்பாடு அதைக்கிழித்துவிட்டு வேறுகடிதமெழுதினேன். எப்படியாவது அவர்கள் சம்மதித்ததே பெரியகாரியம்,'' என்றான். அவன் முதற்கடிதத்தை நினைத்து நாங்கள் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தோம். அப்பொழுது இராத்திரி போஜனகாலம் ஆய்விட்டபடியால், "நடேசா! நீயெனக்குப், படிக்கும்படி அனுமதி வாங்கித்தந்ததற்காக, இன்றைக்கு எங்களுடன் சாப்பிடவேண்டும். அன்று மத்தியானத்தைப்போல் வீண்முகாந்தரஞ் சொல்லக்கூடாது'' என்றேன். உடனே கோபாலனும், அத்தையம்மாளும் என்னுடன் சேர்ந்துகொண்டு அவனை வேண்டவே, நாங்கள் எல்லோரும் அன்றுஇரவை உல்லாசமாய்க் கழித்தோம்.

சாவித்திரி.

---

## தமிழ்மொழி வளர்த்தல்,

அல்லது

## தமிழ்ப் பாஷையை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்கள்.

(154-வது பக்கத் தொடர்ச்சி.)

இதற்குமுன் சென்னப்பட்டணத்தில் கவர்னர்உத்தியோகம் வகித்துநின்ற 'கிராண்ட்டப் என்னும் ஐரோப்பியகனவான், பி-எ- பட்டம்பெறப் போயிருந்த சில சுதேசிகளைநோக்கி, திருவள்ளுவர் குறளும், தமிழ்ப்பழமொழியும் மாத்திரம் வாசித்துப் பார்த்ததிலிருந்து நான் தமிழ்பாஷையின் பெருமையை அறிந்துகொண்டேன்; நீங்கள் தமிழராயிருந்தும், உங்கள் பாஷையை வளர்க்க ஓர் எத்தனமும் செய்யாமலிருந்தது மிகுந்த வியப்பும், பரிதாபமுமாயிருக்கின்றது! ஆகையால் இனியாவது, இந்த மகாபாஷையின் விஷயத்தில் கவனம் செலுத்துவீர்களாக,'' என்றுசொன்னதும், அதைக்கேட்டவர் தலைகுனிந்து, சித்திரப்பதுமைபோல், வீற்றிருந்ததும், தெரிந்தவிஷயம். நமதுபாஷையில் இவ்வளவு அபிமானம் புறதேசத்தாருக்கே யிருக்கும்போது, சுதேசிகளாகிய நாம் இவ்விஷயத்தில் அந்நியரிலும் அந்நியர்போல, சும்மாயிருப்பது அழகோ, கீர்த்தியோ, புண்ணியமோ, புருஷார்த்தமோ? அந்தக்கவர்னர் அப்படிப் பேசக் கேட்டபிறகும், செவிடன் காதிற் சங்கு ஊதப்பட்டதுபோல் இருக்கின்றவர் அநேகர்! இம்மட்டோ? அந்தோ! அந்தோ! சுதேசபாஷைக ளில்லாமலே இந்தப்பரதகண்டம் நன்றாகாதா, எல்லாவற்றிற்கும் இங்கிலீஷ்பாஷையே போதாதா, என்று குருட்டுக்கேள்விகேட்கின்ற பித்தருமுண்டு! சுதேசாபிமானங்கெட்டவர் நிற்கும்படியில், இதிலுமோர் தாழ்ந்தபடியில்லை! அத்தகைய கேள்விக்கு எப்போது விடைசொல்லுவோ மென்றால், அப்படிக்கேட்பவர் பிராமணருடைய வேதத்தையும், சைவர்களு

டைய தேவாரத்தையும், வைஷ்ணவர்களுடைய திருவாய்மொழியையும், மற்றும் தென்மொழி வடமொழிகளிலுள்ள கண்மணிக்கிணையான எண்ணிறந்த நூல்களையும், மனசோடு புதைத்துவிட்டு, தமது உற்றார் பெற்றார் உறவும் விட்டு நீங்கி, அங்கிலேயபாஷையில் வேதாத்தியயனம், பிரார்த்தனை, முதலியசெய்து, அவர்கள் பாழ்நெஞ்சம் குளிரும்படி அங்கிலேயம் பசப்பி, அங்கிலேயர்தம்முடன் கூடி மது மாம்ஸம் புசித்து, அவருடன் சம்பந்தமும் செய்ய உடன்படுவாரென்றால், அப்போது அதற்கு விடையளித்துக் கொள்வோம். அந்தக்கேள்வி கேட்டவர் அப்படிச்செய்யக் கூசுவார்போலும்! கூசுவாரென்றால் அப்போது என்போலிகள் கேட்கும் கேள்வியாதெனில், “என் மற்றகாரியங்களுக் கெல்லாம் அங்கிலேயம் போதுமென்றவர்க்கு, இக்காரியங்களும் செய்துகொள்ளத் தடையென்னவந்துவிட்டது?” என்பதே. அப்படிச்செய்யவும் கூசேமென்றுசொன்னால், அவர்கள் கேட்டவினாவுக்கு விடைபகரவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், அப்போது அவர் ‘அங்கிலேயப்பதர்’ என்ற அந்தஸ்தான பெயர்சூட்டிக் கொள்ள அருகர்தாமென்றுயாவரும் சம்மதிப்போம். அந்தப்பெயர், அப்போது அவருக்கே உரித்தாகும். அப்பாலும் அன்னவரை அங்கிலேயர் தம்முடன் சேர்த்துக்கொள்வாரோ, பதனொன்றுதள்ளிவிடுவாரோ? தள்ளிவிட்டால், அரசன்மகளை மணம்புரிய ஆசைப்பட்ட எளியவன், அது தனக்குச் சம்மதமாயிருக்க, கலியாணம் பாதி நிறைவேறிற்றென்று கொண்டானடித்த கதைக்கு இவர்களே லெக்காவார்கள். அப்போதுதான் இவர்கள் செய்கையின் அழகும்பொருத்தமும் நன்றாய்வெளிப்படும். இப்போது நாம் என்னசொன்னாலும் அதை அவர்கள் நம்பார்கள். அவர்களுக்கு இப்போது வயிற்றுப்பாடே மிஞ்சிநிற்கும். அதற்கும் இப்போது வழி அடைபட்டுக் கொண்டேவருகிறது. இப்போது மெட்ரிகுலேஷன் ப்ரிக்ஷைமாத்திரம் பாஸ்செய்தவர்களுக்கு, கவர்ன்மென்டில் இனிப் பதினைந்து ரூபாய் சம்பளத்துக்குக் குறைந்த மொச்சி முதலியவேலைக்கு மிஞ்சினவேலை கொடுக்கப்படமாட்டாதென்று, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருடைய சட்டம் பிறந்து பலநாளாகவில்லையே. ஆட்டைப்பிடித்தது, மாட்டையும் பிடிக்கும், மனிதனையும் பிடிக்கும். இனித்தாமசமில்லாமல், (F. A.) எப்-ஏ, (B. A.) பி-ஏ பரிக்ஷைகள் பாஸ்செய்தபேர் தொகை அதிகரிக்கும்போது, அவர்களும் இம்மாதிரிச் சட்டத்துக்குப்பலியாகி, அப்புறம் வேறுவேலை யில்லாவிட்டால், வீடுதோறும் பலியேற்குங்காலமும் நெருங்கிவரும் போலிக்கிறது! அவர்கள் கல்விக்கென்று செலவுசெய்த பணமும் திரும்பக்கிடைக்கப் போகிறதில்லை. இதுபோல இப்போது நிகழ்ந்துவரும் காரியங்களையும், சுயபாஷைகள் அடைந்துவரும் தளர்ச்சியையும், கனவான்களே, ஆழ்ந்து, கவலையுடன், சிந்தித்துப்பாருங்கள்! சிந்தித்து அதைநிவர்த்தி செய்யத்தகுந்தவழியைத்தேடுங்கள்! கவலையற்றுச்சும்மா இருக்க இதுவன்றுநேரம்! இன்னும், மட்டில்லாமலும், சிந்தனையில்லாமலும், பிள்ளைகளை அங்கிலேயம் தனியாகப்பயிற்றுவிக்கும் வழக்கத்தை, கவர்ன்மெண்டாரும் சற்றேனும் நெகிழவிட்டபாடில்லை, தாய்தந்தைமாரும் அவருக்கு சுயபாஷைப் பயிற்சி தருவிக்கிறதில்லை! மோசம் நெருங்கி வரும்போது காரியமெல்லாம் தெரியவரும்! ஜாக்கிரதை! ஜாக்கிரதை! இப்போது யதார்த்தவாதி வெகுஜன விரோதியாகவே தோன்றுவான்.

கனவான்களே, இன்னும் ஒரு வார்த்தைசொல்லி இவ்வுபந்நியாசத்தை நிறுத்துகின்றேன். காலதாமசத்தையும் சொற்குற்றங்களையும் மன்னித்து, நான் சொல்லிவந்ததில் உங்களுக்கு எவ்வளவுதூரம் நியாயமாகத்தோன்றியிருக்குமோ, அவ்வளவும் நீங்கள் அங்கீகாரம்செய்து, அவ்வங்கீகாரத்திற்கு ஏற்ப, காரியத்திலும் அதை நிறைவேற்ற முயலவேண்டுமென்று வணக்கமாய் வேண்டிக்கொள்ளுகிறேன். நான் சொல்லிவந்ததெல்லாம் இவ்வுபந்நியாசத்தை, எப்படியாவது வார்த்தைப் பெருக்கால், எழுதிமுடிக்கவேண்டுமென்ற எண்ணத்தினாலன்று. இல்லை, இல்லை: இதைக்கேட்பவர்களுடைய யுக்தி புத்திக்கு இதில் உண்மையென்றும் நியாயமென்றும் தோன்றியவரையில் அவர்களை அதை நடபடியிற் கொண்டுவரச் செய்யவேண்டுமென்று, அந்தரங்கத்தில் உண்மையான, காரியமான உத்தேசங்கொண்டே, இவ்வுபந்நியாசத்தை எழுதப்புகுந்தேன். இந்த பாகத்தை நீங்கள் நன்றாய்க்கருத்திற் பதிக்கவேண்டுமென்று தாழ்மையாய் வேண்டிக்கொள்ளுகிறேன். வெறும்வார்த்தையாடி நிற்க இதுவன்றுநேரம். அந்தோ! அந்தோ! வார்த்தைபேசி நிற்பதை விட்டு, நாம் இவ்விஷயத்தில் அபிமானமும், ஊக்கமுங்கொண்டு, காரியமாய்ச்செய்து முடிக்கவேண்டியவேலை மலை போலிருக்கின்றதே! இவ்விஷயத்தில் இன்னம் கனதனவான்கள் மனமடிந்து அசட்டையாய் இருந்துவிட்டால், பின்வரக்கூடிய ஆபத்தை நினைத்து நெஞ்சம் பதைக்கின்றதே! புறபாஷையாகிய பெருவெள்ளம், நாம் சுயபாஷையாகிய பயிருக்கு அணைகோலிக்கொள்ளுமுன் எங்கேவந்து அழித்துவிடுமோ, என்று மனம் நாற்புறமும் பார்த்துத் தத்தளிக்கின்றதே! நமது வார்த்தையை நம்பி நமக்குத்துணையாய் வரும் உதவியின் சிறுமையும், இபபோது காலத்தின் நிலைமையும் எண்ணியெண்ணி உள்ளம் ஏக்கறுகின்றதே! இன்னுந்தான் தமிழ் பாஷையைத் தாயாக உடைய

வர் அத்தாயை ஆதரிப்பாரோ, இல்லையோ, அவர் நெஞ்சம் இரங்குமோ, இரங்காதோ என்று சந்தேகித்து நெஞ்சம் ஆழித்துரும்புபோல் அலைப்படுகின்றதே! கனவான்களே! அபிமானிகளே! இவையெல்லாம் ஆழ்ந்துயோசித்துப்பாருங்கள்! நெஞ்சத்தை அங்குமிங்கும் அலையவிடாமல் உண்மையாய் நம்பினதை ஊக்கமாய் நடத்துங்கள்! கருணையங் கடலாகிய கடவுளும் அதற்கிரங்கி அருள் செய்வாராக!

முற்றிற்று.

தீ. லக்ஷ்மணப் பிள்ளை. பி. ஏ.

---

## குடித்தனம் பண்ணுகிற மூன்று விதங்கள்.

(147-வது பக்கத்தொடர்ச்சி.)

இப்படியிருக்க, தர்மசீலனுக்குத் தரித்திரர்களுக்கு வைத்தியம் பண்ணுவதில் எப்பொழுதும் வேலைக் குக்குறைவின்றியிருந்தது. ஆனால் சிலநாட் சென்றபின்பு பணக்காரர்கள்கூட இவனிடம் வரத்தலைப்பட்டார்கள். ஒருநாள், இவன் வீட்டுவாயலில் அலங்கார விநோதியின் வண்டியைப்பார்க்கிலும், ஒரு விதத்திலும் தாழ்மையில்லாத ஒரு வண்டிவந்து நின்றது. அப்பட்டணத்தில் மிகுந்த ஐசுவரியமுள்ள தனகோடிசெட்டியார் வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்டவுடனேசத்தியவதிக்குச் சந்தோஷத்தினால் மனந்துடித்தது. அவர் வெகுநாளாய் தீராத மனநோயால் வருந்தி அநேக வைத்தியர்களாலும் தன்னைச்சௌக்கியம்பண்ண முடியாததுகண்டு தர்மசீலனுடைய புகழைக் கேள்விப்பட்டு இவனிடம் வந்தார்.

நோயின்னதென்று தெரியாமல் மனம்போனபடி மருந்துகளைக்கொடுத்து, "பாருங்கள் ஒருநொடியில் சௌக்கியம்பண்ணி விடுறேன்" என்றுசொல்லி வைத்தியம் செய்யும் சில மூடர்களுக்கு இதைப்போல் வேறு நல்லசமயம் கிடைக்கமாட்டாது. ஆனால் தர்மசீலனுக்கு அப்படிப்பட்ட இழிவான தொழிலைச்செய்யக் கொஞ்சங்கூடத்தெரியாது.

தனகோடிசெட்டியாரைப் பார்த்தவுடனே, "அய்யா, உங்களுடைய வியாதியைத்தீர்க்க வைத்தியன் வேண்டியதில்லை; நீங்களே, நான்சொல்லும் சில சங்கதிகளைச் சாக்கிரதையா யனுசரித்து வந்தால், உங்களுடைய வியாதி பறந்து போமென்று" உண்மையைச்சொல்லி, சில பத்தியம் முதலிய வற்றைச் சொல்லி, கடுமையான வேலையும் மனோவிசாரமும் கூடாவென்றும், சிலநாள் சிநேகிர்தகளுடனே சந்தோஷமாகவே பொழுதுபோக்க வேண்டுமென்றும் சொன்னான்.

உடனே, செட்டியார் "நீர் இதைப்பார்க்கிலும் வெகு கொடிய நோய்களையெல்லாம் தீர்த்திருக்கிறீரே. இதென்ன உமக்கு ஒருபெரிதா? நீர் எனக்கு வைத்தியம் பண்ணத்தான் வேண்டும்" என்று பிடிவாதஞ்செய்தவுடனே, தர்மசீலன் "ஐயா, நான் இதுவரையில் ஏழைகளைச் சௌக்கியப் படுத்தினதற்கு முக்கியமான மருந்து யாதெனில் அவர்களைத் தேகசுத்தமாகவும், உணவுமுதலியவைகளில் மிதமாகவுமிருக்கச்செய்வதுதான். அவர்கள், நான் சொல்லித்தானா அப்படியிருக்கவேண்டும். தாங்களே சுத்தமாயும், மிதமாயு மிருந்துவிட்டால் அவர்கள் என்னைத் தேடவேண்டியதில்லையே" என்றான். இதைக் கேட்டவுனே செட்டியார் தர்மசீலனுடைய நற்குணத்தையும் நல்லறிவையும் பார்த்துச் சந்தோஷப்பட்டு அவனிருந்த தரித்திரஸ்திதியைப்பார்த்துப் பரிதாபப்பட்டார். அவனை விட்டுப்போகும்போது கிரமமாய்க் கொடுக்கவேண்டிய பணத்தைப்பார்க்கிலும் கொஞ்ச மதிகமாகவேகொடுத்து "ஏழைகளுக்கு நீர் தர்மத்துக்கு வைத்தியம் பண்ணுகிறபடியால் பணக்காரர்கள் உமக்கு இரட்டிப்பு மடங்கு கொடுக்கவேண்டியது நியாயந்தானே" என்றார். தர்மசீலனைத் தினந்தோறும் தன்வீட்டுக்கு வரும்படி கேட்டுக்கொண்டார். அவனுமப்படியே செய்து வந்தான்: அவரோடுகூடத் தினந்தோறும் வெகுநேரம் சந்தோஷமாய்ப்பேச அவனுக்குச் சாவகாசமிருந்தபடியினாலே தனகோடிசெட்டியார் கூடிய சீக்கிரத்தில் கொஞ்சம் சௌக்கிய மடைந்தார்.

நம்முடைய சிநேகிதர்க ளிருவரும் சோற்றுக்கு வருந்திக்கொண்டிருந்ததை இதுவரைக்கும் பார்த்தோம். இதுவரையில் அவர்கள் கடன்படவில்லை, மேலு மினாமாய் மருந்துகொடுப்பதையும், வைத்தியம்பண்ணுவதையுந்தவிர, ஏழைகளுக்குச் சிலசமயங்களில் பொருளுதவியுஞ் செய்துவந்தார்கள். ஆனால் இதுமுதல் இவர்களுடைய ஸ்திதி வேறுபட்டு விளங்கப்போகின்றது. தர்மசீலன் தினந்தோறும் பணக்காரர்களிடம் போகும்படிநேரிட்டது. அவன் இப்பொழுது வரவு செலவு கணக்குவைக்கும்படி யாயிற்று. இனிச் சத்தியவதியும் ஏழைகளுக் குதவி செய்யப் பொருளுக்காக இவனை வருந்திக்கேட்க வேண்டியதில்லாமற் போயிற்று.

இவர்களை இப்படி விட்டுவிட்டு அப்பட்டணத்தின் வேறொரு தெருவுக்குப் போவோம்.

அங்கு ஒரு பெரியவீட்டில் ஒரு நேர்த்தியான அறையில் அலங்காரவிநோதி உட்கார்ந்திருக்கிறாள் பாருங்கள். அவள் இரண்டுதடவை தன்வேலைக்காரனைக்கூப்பிட்டாள். இரண்டுதடவை அவன் அவளிடத்திற்கு வந்தான்.

"இன்னும் அந்தச் சால்வைகள் வரவில்லையா" என்று இரண்டுதடவைகளிலும் கேட்டாள்.

"இல்லை யம்மா"

"சால்வைகள்வரவில்லையென்பது நிச்சயந்தானா?"

"ஆம் அம்மா."

"அந்த அத்தர் சீசாவை எடு, அதல்ல, அந்தப்பீங்கான் சீசாவையெடு" என்றுசொல்லி அத்தரையெடுத்து கைக்குட்டையில் போட்டுக்கொண்டு "என்ன சங்கடம் இன்னும் சால்வைகள் வரவில்லையே" என்றாள்.

உடனே அடுத்த நிமிஷத்தில் ஒருமனிதன் கையில் ஒருபெட்டியைத் தூக்கிக்கொண்டு உள்ளேவந்தான். அவள் அப்பெட்டியைத் திறந்துபார்த்தாள். அதில் ஒட்டகத்தின் ரோமத்தால் செய்யப்பட்ட 200ரூ முதல் 300ரூ வரையிலும் பெறும்படியான அனேகம் சால்வைகளிருந்தன. இவைகளை யெல்லாமெடுத்துத் தூர எறிந்துவிட்டாள். 200ரூ பெறும்படியான ஒரு சால்வைமட்டும் கொஞ்சம் நேர்த்தியாயிருந்தது. ஆனால், அவள் அதின்விலை வெகு அதிகமென்று நினைத்தாள். தன்னால் அவ்வளவு செலவுசெய்து சால்வை வாங்கமுடியாது; ஆனால் ஏதாகிலும் ஒன்றுவேண்டியது அவசியந்தான் என்றாள். அந்தவியாபாரி "நீங்கள் எதை எடுத்துக்கொண்டபோதிலும் பின்னால் வருத்தப்படமாட்டீர்கள். எல்லாம் வெகு சகாயமாய்க் கொடுக்கிறேன்" என்றான். அவளுமப்படியே நினைக்க ஆரம்பித்தாள். கடைசியில் உடனே ரொக்கம் கொடுக்கவேண்டாமானால் 200ரூ பெறும்படியான ஒரு சால்வையை வைத்துக்கொள்ளலாமென்று தீர்மானித்தாள்.

"நீங்கள் ரொக்கம் கொடுக்கவேணு மென்பது அவசியமில்லை யம்மா. ஆனால் என்னிடத்தில் வேறொரு சால்வையிருக்கின்றது. அதையும் வேணுமென்றால் பாருங்கள்." என்று வியாபாரி சொன்னான். அலங்காரவிநோதிஅந்தச்சால்வையையும் பார்க்கவேணுமென்று சொன்னவுடன், வியாபாரி அதையும் அவளுக்கு எடுத்துக்காட்டினான். அதன் விலையோ 300ரூ. அதுமிகவும் நேர்த்தியாயும், சிறந்ததாயுமிருந்தது. ஆனால் அலங்காரவிநோதி அதை வாங்கச்சக்தியில்லாதவளாயிருந்தாள். இருந்தபோதிலும் தான் முன்னெடுத்துவைத்த 200ரூ சால்வையையும் இதையும் ஒத்துப்பார்க்கும்போது, 200ரூ சால்வை நன்றாயிருக்கவில்லை. உடனே கோபத்தோடு, 200ரூ சால்வையைப்பார்த்தாள். வியாபாரியோ 300ரூ சால்வையின் அழகை வர்ணிக்கத் தொடங்கி கடைசியில் இவள் முதுகில் போர்த்திவிட்டான். அது இவளுடைய ஆடையின்பேரில் வெகு நேர்த்தியாய்ப் பொருந்தியிருந்தது. உடனே, நிலைக்கண்ணாடி முன்சென்று, முன்னழகையும், பின்னழகையும் திரும்பித் திரும்பிப்பார்த்துக் கொண்டாள். அச்சால்வையைத்தன்மேல் போட்டுப்பார்த்தாள், எடுத்துப்பார்த்தாள், ஒருகையில் மடித்துப் போட்டுப்பார்த்தாள். இப்படியெல்லாம் பார்த்த பிறகு "நல்லது இதை நானேவைத்துக் கொள்ளுகிறேன். எனக்கு ஒன்றுவேண்டியது அவசியந்தான், இச்சால்வை வெகு சகாயந்தா னென்று நினைக்கிறேன்" என்றாள்.

இப்படியிருக்க சத்தியவதி அவ்விடம் வந்து சேர்ந்தாள். வியாபாரியை உடனே போகச்செய்து, அலங்காரவிநோதி சால்வையை ஒரு நாற்காலியின்மேல் அழகாய்மடித்து வைத்துவிட்டு "ஓ! சத்தியவதி, நீ வருவாயென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். நீ முன்என் வீட்டுக்கு வருவேனென்று செய்த வாக்குத்தத்தத்தை நான்மறக்கவில்லை" என்றாள். அலங்காரவிநோதி தனக்குச்செய்த மரியாதையைக்கண்டு சந்தோஷப்பட்டு, சத்தியவதி ஒரு சமாசாரம் சொல்லத் தொடங்கினாள்.

அதாவது, காளியின் பிள்ளைகள் உள்பட சில ஏழைப்பிள்ளைகளுக்குத்தர்மபாடசாலை ஒன்று ஏற்படுத்தி, தர்மத்துக்கு அன்னவஸ்திரம் முதலியவற்றைக் கொடுக்க வேணுமென்பதுதான்.

சத்தியவதி.—'நான் செய்திருக்கிற ஏற்பாட்டை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்களென்று நினைக்கிறேன். வெகுகாலமாய், நானே இத்தர்மத்துக்கு என் கையிலிருந்து ஒருபாகம் போடவேணுமென்று நினைத்திருந்தேன். ஆனால் இப்பொழுதுதான் என்புருஷனுக்குத் தகுந்தவரும்படி வந்து கொண்டிருக்கிறது. ஆகையால், நீங்களும் ஒருபாகம் கொடுக்கத்தான் வேணுமென்று கேட்க எனக்குத்தைரியம் உண்டாயிருக்கிறது" என்றாள்.

அலங்காரவிநோதி—"ஆ! ஆ! சத்தியவதி, நீ எவ்வளவு தர்மசாலியா யிருக்கிறாய். எனக்கும் உன்னைப்போல தர்மம் செய்ய ஐசுவரிய மிருக்கக்கூடாதா?எனக்கு எப்பொழுதும் ஏதாவது வேலையிருந்து கொண்டே யிருக்கிறது. ஒவ்வொரு நிமிஷமும் ஏதேனும் செலவு இருந்து கொண்டேயிருக்கிறது. பொதுவாய்ப்பணக்காரர்களுக்குத்தான் பெரியசெலவுகளிருக்கின்றன. ஆகையால், அவர்களைப் பணக்காரர்களென்றுசொல்லுவதே தப்பிதம்"—என்று தன்னுடைய நேர்த்தியான பட்டுப்பையை யெடுத்து மோதிரங்களணிந்த விரல்களில்தொங்கவிட்டுக்கொண்டு பின்னும் சொல்லுகிறாள்:— "என்னிடத்தில் ஒருபைசா கூட இல்லை. இதோ பார், பையில் ஒன்றுமில்லையே. ஆனால் உன்னுடையஏற்பாடு வெகு நல்ல தர்மந்தான். ஆகையால், தயவு செய்து நீ எவ்வளவு அத்தருமத்துக்குக் கொடுக்கப்போகிறாயோ அத்தொகையை எனக்காக நீ கடனாகப்போட்டுக்கொண்டால், பிறகு அதை நான் திருப்பிக்கொடுத்து விடுகிறேன்"— என்றாள்.

சத்தியவதி வெகு சந்தோஷத்துடனே சம்மதித்து செலவு பெற்றுக்கொண்டு தன் வீட்டுக்குத்திரும்பி விட்டாள்.

(இன்னும் வரும்.)

க. ஐயராமய்யர், பி. ஏ,

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

என் சின்னஞ்சிறு நேசர்களே, இந்தவிசை நமது சபைக்கு புதிய தோழர் ஒருவர் வந்திருக்கிறார். சிறுவர்க்கான இந்த பாகத்தை சிறுவர்களைக்கொண்டே நடத்தவேண்டுமென்று மாயாண்டி முன்னொரு சஞ்சிகையில் எழுதியது ஞாபகமிருக்குமே. அப்படி நானெழுதியதற்குக் காரணம் வயதுவந்த பெரியவர்கள் நமது கருத்துகளை யறிந்து நம்மோடு அநுதாபங்காட்டிச் சல்லாபிக்கார்களென்று சொன்னேன். அப்பொழுது ஒருவகையாரை மறந்துவிட்டேன். "50-சென்றால் அரைக்குழந்தை" யென்று ஒரு வசனம் சொல்வதுண்டு. என்னுடைய பாட்டனார் அவர் வேலையை யெல்லாம் விட்டுவிட்டு என்னோடும் என் தங்கையோடும் விளையாடுவதில் அதிகக் காலத்தைக் கழித்துக்கொண்டிருக்கும்பொழுது வீட்டுவேலை வெளியில் போயாகவேண்டியது ஏதாவதிருந்தால் என் பாட்டியார் வந்து, "குழந்தைகளோடு குழந்தையாக நன்றாய் விளையாடிக்கொண் டிருந்தீர்கள்! கடைக்குப்போக வேண்டுமென்று நேற்றே சொன்னேனே. இன்றைப் பொழுதையும் இப்படி கழித்துவிட்டால் எப்போ கடைக்குப் போகிறது?" என்று மூஞ்சியைச் சிணுக்கிக்கொண்டு கோபித்துக் கொள்வள். அப்பொழுது என் தாயார், "ஐம்பது சென்றால் அரைக்குழந்தை என்பார்கள். அவருக்கு 70-ஆய்விட்டது. அவர் இனிமேல் குழந்தையில்லாமலென்ன ? அவர் சந்தோஷமாக விருக்கிறதைக் கெடுக்காதே. கடைக்குப்போக அவரை விட்டால் வேறுயாரு மில்லையா என்ன? கடு கடு என்று அவரிடத்தில்போய் மூஞ்சியைச்சிணுக்காதே. சும்மா இரு." என்று அவள் தாயாருக்கு சமாதானம் சொல்வதுண்டு. அது எனக்கு இப்பவும் நன்றாக ஞாபகத்தி லிருக்கிறது. என்தாயார் சொன்னது போல் கிழவர்களெல்லாம் குழவிகள் தான் என்பதற்கு இப்பவும் ஒரு உதாரணம் காண்பீர்கள் பாருங்கள். நமது சபைக்கு இப்போ புதிதாய் வந்திருக்கிறதாகச் சொன்ன தோழர் யாரென்று நினைக்கிறீர்கள்? நீங்கள் யாராவது ஊகித்தறிந்து கொண்டால் கிழே வாசித்துப் பார்க்காமல் சொல்லுங்கள் பார்ப்போம்.—ஆம், சரி! அவர் ஒரு 'தாத்தா' தான். எத்தனை வயசான தாத்தாவோ அது எனக்குத் தெரியாது. அவரே 'கிழவன்' என்று தான் கையெழுத்துச்செய்திருக்கிறார். கிழவனைத் தாத்தா என்று கூப்பிட நமக்கு சந்தேக மென்ன? முதலில் இவர் சிறுவர்க்கான பக்கத்துக்கு எழுதினது என் கைக்கு வந்ததும் வயது சென்றவர் சிறுவர்சபையில் சேர்ந்து அவர்களோடு உறவாடி உல்லாசமாக விருப்பரோ என்று யோசித்தேன், ஆனால் இவர் எழுதியதையும், கீழே கிழவன் என்று கையெழுத்துப் போட்டிருந்ததையும் பார்த்தவுடன் இவர் நமது சபைக்கு ஏற்றவர்தானென்று கண்டேன். உடனே என் பாட்டனார் எங்களோடு விளையாடிக் கொண்டிருந்ததும் என் தாயார் கிழவர்களெல்லாம் குழவிகள்தானென்று சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தது. என் தாயார் சொன்ன நியாயத்தைக்கொண்டு இவரையும் ஒரு குழவியென்று ரூபித்துவிட்டு இவரை நமதுகூட்டத்தார்க்குப் பரிச்சயம் செய்துவிடக் கொண்டுவந்திருக்கிறேன். அவரும் ஒரு குழவியென்று ரூபித்துவிட்டேனே யென்று அவரைப் பந்தடிக்கக் கூப்பிடாதேயுங்கள். அவர் வயதுசென்ற குழவியாதலால் ஒருக்கால் அதற்கு சம்மதிக்காமல் போய்விடுவார். முதலில் அவர் சொல்வதைக் காதுகொடுத்துக் கேளுங்கள். பழகப் பழகப்பார்த்துக் கொள்ளலாம். இந்தவிசை நமது குட்டியண்ணுவும் நம்சபைக்கு வந்திருக்கிறார். அவர் எடுத்ததற்கெல்லாம் ஒருகதை சொல்கிறார். இப்படியே ஒவ்வொரு தடவையும் அவர் கதை சொல்லிவந்தால் அவருக்கு நாமெல்லாம் சேர்ந்து புராணிகர் என்றொரு பட்டப்பேர் கொடுக்கலாமென்று நினைக்கிறேன். ஆனால் இதைப்பற்றி நீங்களே யோசியுங்கள். என்கடையை நான் இந்தமட்டோடு கட்டிவிடுகிறேன். நீங்களெல்லாரும் நமது தாத்தா சொல்வதைக் கேளுங்கள். பெரியவர் இத்தனை நேரமாக என் அதிகப்பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டு காத்திருந்தார். இன்னமும் அவரைக் காக்கவைப்பது சரியல்ல.

இங்ஙனம், உங்கள்
விளையாட்டுத்தோழன்,
மாயாண்டி.

---

பிள்ளைகளே! பெண்மணிகளே!

உங்களைக்கண்டால் எனக்கு அதிக ஆசையாக இருக்கிறது. ஏன்என்றுகேட்டால் நீங்கள் கேட்கிறகேள்விகளுக்கு நான் ஏதாகிலும்பதில் சொன்னால், நீங்கள் கபடநாடகம் சூதுவாது அறியாதஇளந்தைகள் ஆனபடியால், நான்சொல்வதைச்சரிதான் என்று ஒத்துக்கொள்வீர்கள். மீசைமுளைத்த பெரிய குழந்தைகளிடத்தில்

நான் ஏதாகிலும் சொன்னால், அவர்கள் என் சொல்லைமதிக்கிறதேஇல்லை. ஒன்று வந்து இது என்ன அதிசயம், இது நன்னூலில் இல்லையோ என்னும். இன்னொன்று வந்து இதை நான் அறியேனோநான்ஐந்தாம்பாடத்தில்படித்திருக்கிறேனே என்னும். மற்றொருகுழந்தை ஓகோ நான் இதை இருபது வருஷத்திற்கு முன்னமே கேள்விப்பட்டு இருக்கிறேன் என்னும். வேறொரு குழந்தை எல்லாம் குறளில் இருக்கிறது, நீர் என்ன புதுமை செய்கிறீர் என்னும். இதையெல்லாம் கேட்டால் எனக்கு இரண்டும்பற்றி எரிகிறது. ஒருசமயம் இரண்டும் சிரிக்கிறதும் உண்டு. ஆகையால் இந்த மீசைமுளைத்த குழவிகளை நெருங்கி அவர்களுடன் சிநேகம்பண்ண எனக்கு இஷ்டம்இல்லை. மீசை முளைக்காத சின்னஞ்சிறுவர்களான உங்களோடுகூட எங்கேவேணுமானாலும் வருவேன். உங்களுக்கு காணாத புதுமை பல காட்டுவேன். ஒவ்வொரு சமயம் வீண் ஆரவாரங்கூட விளைவிப்பேன். ஆனால் இதை யெல்லாம் விளையாடும் வித்தை என்றே நீங்கள் வைத்துக்கொள்ளுங்கள். அது இருக்கட்டும். இப்படி வாருங்கள். இந்த அரசமரநிழலில் உட்காருங்கள். நான் இந்த கருங்கல் பாறையின்மேல் உட்காருகிறேன். நான் சொல்வதை உற்றுக்கேளுங்கள்.

I

நான் பத்துப் பிராயத்தில் என்னுடையதகப்பனார் இடத்தில் காலையில் இரண்டுமணி நேரம் பாடம்கேட்பதுவழக்கம். அவர் எனக்குச்சுளுவான கதை புஸ்தகம் ஏதாகிலும் வாங்கிவந்து கொடுத்து அதை படிக்கச்சொல்லி கேட்பார். எனக்கு இஷ்டமான வடை தோசை முதலிய பலகாரங்களின் பெயர்களையும், ஓட்டின்மேல் வந்து கூவுகிற காகம் குருவி முதலானவைகளின் பெயர்களையும் பலகையில் எழுதச்சொல்வார். கணக்குப்போடவேண்டுமானால் அவர் என்னை விரல்விட்டுக் கூட்டும்படி அடித்ததே இல்லை. மாட்டுக்குக்கால் எத்தனை எண்ணிக் கொண்டுவா என்பார். திண்ணையில் எத்தனை தூண்கள் என்று கேட்பார். வீட்டுச்கு எதிரில் எத்தனை பனைமரம் இருக்கிறது என்பார். கையில் தம்படி காலணா அரையணா அரைக்கால் ரூபாய் கால்ரூபாய் அரைரூபாய்களை வைத்துக்கொண்டு என்னிடத்தில் கொஞ்சம் கொடுத்து சில்லரை மாற்றிக்கொள்வார். என்கையில் சில்லரைகொடுத்து ரூபாய்கொடுஎன்று கேட்பார். அப்பொழுது எனக்கு மெத்த சந்தோஷமும் சிரிப்புமாக இருக்கும். நானும் என்னைப் பாங்கிரயிட்டராக நினைத்துக் கொள்வேன். வீட்டில் அரிசிவாங்கிவந்தால் அதில் ஒரு பிட்டுக்கூடை அரிசியைப்படிபோட்டுஅளக்கசொல்வார். ஒரு அடி மட்டப்பலகையை என்கையில்கொடுத்து எங்கள் தெருக்குறட்டை அளந்து பார்க்கச் சொல்லுவார்கள். அப்புறம் நான்எங்களுடைய வீடுவாசல் எல்லாவற்றையும் திருப்பித்திருப்பி அளந்துபார்த்து பலகையில் எழுதி சாயந்திரம் அவருக்குக் காட்டி விடுவேன். ஒரு திராசு வாங்கிக்கொடுத்தார். அதைவைத்துக்கொண்டு நானும் என் தங்கையும் தெருத்திண்ணையில் கடைவைத்துக்கொண்டு வீசையும் பலமுமாக மணலையும் கல்லையும் புளி முளகாயாக நிறுத்து நிறுத்து விற்பதும் வாங்குவதுமாக விளையாடுவோம். இப்படி யிருக்கையில், எங்கள் தகப்பனார் சம்பளம்வந்தஉடனே வீட்டுக்குச்சாமான் வாங்கிவந்தால், நானும் என் தங்கையும் அதகளை நிறுத்துப்பார்த்து கடைக்காரன் நிறுத்தது சரிதானா என்று எங்கள் தகப்பனார் கையில் வைத்திருக்கும் சீட்டோடு ஒத்திட்டுப் பார்ப்போம். எங்கள் அண்ணா அச்சடித்த சட்டம் வாங்கி வந்து கொடுத்தார். [இந்தக்காலத்துப் பிள்ளைகளுக்குச் சட்டமென்றால் தெரியாது. இங்கிலீஷ் படிப்பு படிக்கிறோமென்று இங்கிலீஷையும் தமிழையும் ஒன்றுப் கொட்டியளக்கிறார்கள். இவர்களுக்கு 'காபி' என்றால் தெரியும்—மாயாண்டி.] நான் அந்தச் சட்டத்தில் மேல் வரியைப்பார்த்து நன்றாய் மொச்சைக் கொட்டையைப் போல் எழுதுவேன். ஒரு நாள் எங்கள் வீட்டு வண்ணான் பதினொரு மணிக்கு வந்தான். அப்போது எங்கள் அப்பா வெளியில் போய் விட்டார். அம்மா அவர்கள் சமையல் செய்த இளைப்பினால் படுத்துக் கொண்டிருந்தார்கள். எங்கள் கணக்கப்பிள்ளை சாப்பிடப்போயிருந்தான். மேசை அறையில் இருந்த வண்ணான் கணக்கை எடுத்து, நான் வலதுகையில்வைத்துக்கொண்டு இடது கையை இடுப்பின் மேல் வைத்து நிமிர்

ந்து கொண்டு, காதின் மேல் பென்சிலை வைத்துக் கொண்டு நிலைக்கண்ணாடியில் மூடிக்காக இருக்கிறேனா என்றுபார்த்துக்கொண்டு, பின்பு வண்ணான் எதிரில் போய் வரி வரியாய் படித்தேன். வண்ணானும் அடுக்கு அடுக்காய் சல வைத் துணிகளை அடுக்கி வந்தான். எல்லாம் எண்ணிப்பார்க்கும்போது கணக்குசரியாகஇருக்கவே துணிகளை மூட்டையாகக் கட்டி வைத்தான். நானும் என் தங்கையுமாக மூட்டையை க்கட்டிலின் மேல் வைத்து விட்டோம். அழுக்குத் துணிகளைப்பொறுக்கி வந்து நடையில் போட்டு என் தங்கையை எழுதச் சொல்லி விட்டு நான் தலையணை உறைகளை கழற்றப் போனேன். எல்லாங் கழற்றியானவுடனே என் தாயார்தலையின் கீழிருந்த அணையை இழுத்து வேறு அணையை வைத்தேன். அவர்கள் உடனே விழித்துக் கொண்டு என்னடா என்றார்கள். வண்ணானுக்கு நானும் தங்கையுமாக அழுக்குப்போடுகிறோம் என்று சொன்னேன். அவர்களும் எங்கள் பக்கமாய்த்திரும்பிப் படுத்துக்கொண்டு கண்ணை மூடுவதும் திறப்பதுமாய் இருந்தார்கள். நாங்கள் எல்லாம் போட்டுக் கணக்கும் எழுதி விட்டோம். அப்புறம் என் தாயார்எழுந்துவந்து எல்லாம் பார்த்துக் கணக்குக்சரியாய் இருக்கிறதை அறிந்து எனக்கு ஒரு முத்தமும் என் தங்கைக்கு ஒரு முத்தமும் கொடுத்தார்கள். நாங்கள் சொக்காயிலிருந்த பொன் வெள்ளி பொத்தான்களை ஏதாகிலும் விட்டு விட்டோமோ என்று அப்புறம் நினைத்துக்கொண்டோம். அப்போது என் தாயார் உங்கள் அப்பா வெளியே போகும்போது அவைகளைக் சொக்காய்களில் மாட்டிக்கொண்டு போய்விட்டாரே என்றுசொல்லவே எங்களுக்குத்தைரியம் உண்டாயிற்று. சொக்காய் பைகளில் இருந்த கடிதங்களை எடுத்து முன்னமே ஒரு பீரவின் முகப்பில் பலகையின் மீது வைத்து விட்டோம். அப்புறம் எங்களுக்குக்கைச்செலவுக்குகொடுக்கிறபணத்தைப் பற்றி நாங்களே ஒரு சிறிய புஸ்தகந் தைத்து அதில் வரவு செலவு எழுதி வந்தோம். இப்படியாக ஓ பிள்ளைகளே பெண்மணிகளே நாங்கள் பள்ளிக்கூடத்தில் உதை படாமல் எங்கள் விட்டில் தானே தாட்டியாகப்படிக்கவும் எழுதவும் கணக்குப் பார்க்கவும் கற்றுக் கொண்டோம். எங்கள் அப்பாவுடைய நகைப்பே எங்களுக்கு வெகுமானம். அவருடைய கோபமே எங்களுக்கு தண்டனை. அவருடைய ஆசையே எங்களுக்குப் பேராசை, அவரை பூசிப்பதே எங்களுக்கு குருபூசை, நாங்கள்சிறியவர்களாய் எங்கள் தாயாரிடத்தில் எழுத்து முதலானது கற்றுக் கொள்ளும்போது எங்கள் தகப்பனார் குறுக்கிடுவதில்லை. எங்கள் தகப்பனாரிடத்தில் பெரியபாடங்களைப் படிக்கும்போது எங்கள் தாயாரும் குறுக்கிடுகிறதில்லை, எங்கள் தாயார் பொழுது விடிந்த உடனே எங்களைப் பல் விளக்கச் சொல்லித் தின்பதற்கு ஏதாகிலும் கொடுப்பார்கள். ஒன்றும் இல்லா விட்டால் சீக்கிரத்தில் சமையல் செய்து சோறு போடுகிறேன் என்பார்கள். தினம் காலையில் சாப்பிடுமுன் எங்களுக்கு நீராட்டி தோய்த்த வஸ்திரத்தை கொடுப்பார்கள், நாங்கள் பகல் வேளையில் எங்கள் தகப்பனார் மேசையின் மேல் வைத்திருக்கிற சித்திரம் பொம்மை முதலான படங்கள் உள்ள பத்திரிகைகளைப் பார்த்து அதனை இன்னின்னதென்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டும் அவைகளைப் போல் எழுதிக் கொண்டும் பொழுது போக்குவோம். இதிருக்கட்டும். நாளைக்கு உங்களுக்கு வேறே சங்கதிகள் சொல்லப்போகிறேன், போய் விளையாடுங்கள்.

கிழவன்.

---

துட்டியண்ணா கடிதம்.

என் அன்புள்ள சிறு நண்பர்களே !

போனமாதம் நம்முடைய தோழிகளுக்கு "ஸ்த்ரீபுத்திঃப்ரளயாந்தகঃ" என்பதைப் பற்றி நான் சொல்லிய கதையை நீங்கள் அறிந்திருக்கலாமே. இந்தத்தடவை உங்களுக்கு ஒரு விநோதமான கதை கொண்டுவந்திருக்கிறேன். அதைக்கேட்கும்போது சிரிக்கச்சிரிக்க வேடிக்கையைச் செய்யத்தக்கதாயும் விவேகத்தைத் தரத் தக்கதாயும் இருக்கும். இது நான் போய்க்கொண்டிருக்கும் பாடசாலையில் பிடித்த சரக்கு. அப்பாடசாலையில் படிக்கும் சிறுவர்களில் ஒருவனுக்கு அப்பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களில் ஒருவர் வீட்டுப் பாடம் சொல்லி வந்தார். (வீட்டுப்பாடம் = private tution)

அவ்வாலிபன் இச்சென்னப்பட்டணத்தில் உயர்ந்த உத்யோகம்செய்து மிகுந்த செல்வாக்குப் படைத்த கனவானான ஒரு தனவானுடைய புத்திரன். அப்பையன் அவன் பெற்றோருக்கு ஏகபுத்திரன். பையன் பிறந்த சில தினங்களில் தகப்பன் இறந்துபோகவே பிள்ளையைக் காப்பாற்றவேண்டிய பாரமெல்லாம் தாயின்தலையில் பொறுத்தது. அந்த அம்மணியோ, மகாபதிவிரதா சிரோமணி. உயிர்களிடத்து அன்பும் ஆதரவும் உடையவள். தர்மகுணசீலை. சாதுக்களை ஆதரிப்பவள். கல்வியருமையும் கற்றோர் பெருமையும் நன்றாய்அறிந்தவள். தன்பிள்ளை கைம்பெண் வளர்த்த கசடன் என்று பேரெடாமல் எப்படியாவது தன் பர்த்தாவின்பேரை முன்னுக்குக் கொண்டுவந்து, நாலுபேருக்கு யோக்கியனென்று பேரெடுத்து நல்ல ஸ்திதியில் இருக்கவேண்டுமென்று எண்ணி, தன் மகனுக்கு வீட்டில் படிப்புச்சொல்ல ஏற்பாடு செய்தாள். அவரோ பொருளையே பொருளாக எண்ணுபவர் அல்லர். பிள்ளைகளே பெருஞ்செல்வமாகவும் அவர்களோடு பொழுதுபோக்குவதே உல்லாஸமாகவும் எண்ணுகிறவர். மேற்படி பையனுக்கு அவர் பாடம் சொல்லிவராநிற்க, பையனுக்கும் வாத்தியாருக்கும் ஒருவர்க்கொருவர் மிக்க நேசமுண்டாகி, காலம் இன்பமாய்க்கழிந்தது. இப்படி இருக்கையில் அப்பையன் படித்த பள்ளிக்கூடத்தில் வெளியூரான் ஒருவன் படிக்கவந்துசேர்ந்தான். அவனுடைய குணமும் நடத்தையும் கெடுதல் என்று, அப்பள்ளிக்கூடத்தில் இருப்பவராதலால் அந்த வாத்தியாருக்கு நன்றாய்த்தெரியும் அப்புதியவாலிபன் நான் மேலேசொன்ன சிறுவன் பணக்காரனென்றும் தயாள குணமுள்ளவனென்றும் எளிதில் மோசம்போகக்கூடியவனென்றும் எப்படியோ தெரிந்துகொண்டு மெள்ள இவனோடு சிநேகம் செய்யத் தலைப்பட்டு இவன் வீட்டுக்கு வருவதும் போவதுமாய் இருந்தான். அவன் நம்முடைய சிறுவனோடு இரகஸியத்தில் பேசுவதையும் பிறர்க்குத் தெரியாமல் இவனோடுகலந்து உறவாடுவதையும் வாத்தியார் பலதடவைகளில் பார்த்து அவனை வீட்டில் சேர்த்தால் ஏதாவது நஷ்டமும் கஷ்டமும் நேருமென்று ஜாடையாய்ச்சொல்லியும் பையன் கேளாமல் அவனோடு அதிகமாய்ப் பழகியே வந்தான்.

நம்முடைய சிறுவன் எல்லார்க்கும் எளிதில் அடையக் கூடியவன். எடுத்தார் கைப்பிள்ளை. விளையாட்டுக் காட்டுவோருடைய நயவஞ்சனை பேச்சில் எளிதில் மடங்கும் இயல்புள்ளவன். எந்த நற்காரியத்தையும் தானும் அறிந்துகொள்ளான்; பிறர்சொன்னாலும் தெரிந்துகொள்ளான். ஒன்றுசொன்னால் மற்றொன்று செய்வான். இப்படிச்செய்வது அவனுடைய இயற்கையான அறியாமையினாலேயே யொழிய வேறில்லை.

ஒருநாள் மேற்சொன்ன அயலூர் வாலிபன் ஒருவரும் இல்லாத சமயம்பார்த்து நமது சிறுவனது அறைக்குள்புகுந்து இரண்டொரு புஸ்தகங்களையும் சில விலையுயர்ந்த பொத்தான்களையும் ஒரு கடிகாயந்திரத்தையும் திருடிக்கொண்டு போய்விட்டான். இது சங்கதிதெரிந்து பையன் வருத்தப்படும்போது வாத்தியார் பையனை நோக்கி "உனக்காயும் தெரியாது, ஒருவர்சொன்னாலும் கேளாய், நான் ஒன்று சொன்னால் நீ யொன்று செய்கிறாய்" என்று சொல்லி,

"ஸ்வயபுத்தி யில்லாவிட்டாலும் சொற்புத்தி
யாவதுவேண்டும்"

என்பதைப்பற்றி ஒரு கதையைச்சொன்னார். அதாவது:—ஒரு ஊரில் ஒருபிராமணன் இருந்தான். அவனுக்கு ஒரேபிள்ளை. அவன் மகாமூடன். எழுதப்படிக்கத்தெரியாதவன். அவன் முழுமூடனா யிருந்ததுமன்றி ஏழையுமாயிருந்தான். இப்படிப்பட்ட தன்மகனுக்கு எப்படியாவது கலியாணம் செய்துவிட வேண்டுமென்று அந்தபிராமணன் எண்ணிப் பெண்தேடலுற்றனன். இப்படியிருக்கையில், மற்றோரூரில் ஒரு அந்தணன் மிகுந்தபணக்காரனாகவும் ஒரே பெண்ணை உடையவனாகவும் இருந்தான். அப்பெண்ணோ அதிரூபலாவண்ய சௌந்தரியமும், நிறைந்தகல்வியும், நற்குண நற்செய்கைகளும் பொருந்தி மகா புத்திசாலியாயிருந்தாள். பெண்ணுக்குத் தகுந்த புருஷனை மணம் செய்விக்கவேண்டுமே என்று பெண்ணைப்பெற்றவன் யோசித்து முப்பத்திரண்டு குணமும் எவ

னுக்கு இருக்கிறதோ அவனுக்கே தன்பெண்ணை மணம்செய்து கொடுப்பதாய்த் தீர்மானித்திருந்தான். இது சங்கதி கேள்விப்பட்டு மூடப்பிள்ளைக்குப் பெண் தேடும் பிராமணன் வந்து புத்திரனுக்கு முப்பது குணங்களிருக்கின்றமையால் அந்தப்பெண்ணை விவாகம் செய்து கொடுக்கும்படி பெண்ணுக்குத் தகப்பனைக்கேட்க, அவனும்யோசித்து, நாம் அநேகம்பிள்ளைகளைப்பார்த்தோம். எவனுக்கும் இவ்வளவுகுணங்கள் இருக்கக்கண்டதில்லை. இவனுக்கு இரண்டுகுணங்கள்தானே இல்லை. பாதகமில்லை. என்று கலியாணத்தை நிச்சயித்து வேண்டிய ஆடம்பரங்களோடும் நடத்தத் தொடங்கினன். கலியாணத்தை நடத்துவிக்கும் புரோகிதர், பொரியிடுந்தருணத்தில் பிள்ளையாண்டானை நோக்கி பொரியை ஆகுதி செய்யச் சொல்ல, அவன்தன் வாயில்போட்டுக்கொண்டான். புரோகிதர், அடா! அடா! அக்கியிலல்லவோ இடச்சொன்னேன், வாயில் போட்டுக்கொண்டாயே என்னவே, மணமகன் உடனே வாயிலிருந்த பொரியை அக்கிகுண்டத்தில் உமிழ்ந்தான். இதைக்கண்டு புரோகிதர் இது என்னடா! அக்கியை எச்சிலாக்கி விட்டாயே" என்ன, மணப்பிள்ளை, அக்கியைச்சுத்தி செய்து விடுகிறேனென்று பக்கத்திலிருந்த ஒரு செப்பு ஜலத்தை அக்கியில் கொட்டிவிட்டான். புரோகிதர், வெகு அழகு! நான் கல்யாணம் செய்விக்கிறது வெகு நன்றாயிருக்கிற தென்று தம்மையேவெறுத்துக்கொண்டு, போதும் அப்பா நீ சும்மா உட்கார் என்றார். அதற்கு முழுமூட மணப்பிள்ளை, கழனியில் களைபிடுங்கியும் நாற்று நட்டும் வழக்கப்பட்டவனாதலால், ஒரு காலை மண்டியிட்டு மற்றொரு காலை குத்திட்டு, தர்ப்பணம் செய்கிறவன் போல் உட்கார்ந்தான். இதைக்கண்டவுடன் புரோகிதருக்கு அடங்காக்கோபம் உண்டாகி, "என்னடா ஒன்று சொன்னால் ஒன்று செய்கிறாய்" என்று கடிந்து சொல்லவே, நம்முடைய மந்த புத்திமணப்பிள்ளை, ஐயா, இனி நான் ஒன்றும் செய்கிற தில்லை; செத்தபிணம் போல விழுந்து கிடக்கிறேனென்று சொன்னான். உடனே, கீழே தன்மணப்பிள்ளை செய்கைகளையும், இப்பொழுது கல்யாணப் பந்தலில் செத்தபிணம்போல்விழுந்துகிடக்கிறேன் என்ற அமங்கலவார்த்தையையும்கேட்டு பெண்ணைக்கொடுத்த பிரபு சம்பந்திப்பிராம்மணனைப் பார்த்து ஆருச்சினத்தனாய் அடபாவி! உன் பிள்ளைக்கு முப்பது குணங்களிருக்கின்றனவென்று சொன்னையே அந்த பவிஷு இதுதானா என்று கேட்கவே, பிராமணன், "ஐயா, நான் முன்னையேஇரண்டுகுணங்களில்லையென்றேனே அதாவது தானு மறியான், ஒருவர் சொன்னாலுங் கேளான். இதுவே தவிர மற்றப்படி உண்பது உடுப்பது உறங்குவது முதலிய காரியங்களில் சமர்த்தன்தான். வேண்டுமானால் பரீக்ஷை செய்து பார்த்துக்கொள்ளலாம்" என்றான்.

கேட்டீர்களோ என் அருமைச் சிறு தோழர்களே! ஆகையால் நீங்கள் ஒவ்வொரு காரியத்தையும் கூர்மையாக ஆராய்ந்து பார்த்துச்செய்யமுயலுவது மல்லாமல் அறிவுடையபெரியோர் சொல்லுவதையுங்கேட்டு அதன்படிசெய்யப்பாருங்கள். நல்லது நான்இந்தமுறை உங்களிடத்து அதிக அவசரத்தில் வந்தேன்; இப்பொழுது எங்கள் பள்ளிக்கூடத்தில்பரீக்ஷைகள் சமீபித்தபடியால் அதிகவேலைகள் எனக்கு இருக்கின்றன. போய்வருகிறேன்.

இப்படிக்கு
உங்களன்புள்ள
குட்டியண்ணா.

---

அங்கிலேய நாட்டுக்கவி சக்கிரவர்த்தியுமிராஜ கவிவாணருமாயிருந்த லார்ட்டென்னிஸன் நாளது அக்டோபர்மீ 6உ அவருடைய 83-வது வயதில் காலஞ்சென்றார்.

கனம்பொருந்திய கவர்னர் லார்ட் வென்லாக் அவர்கள் அக்டோபர்மீ 10உ முதல் வெளிஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்துவருகிறார்.

கனம்பொருந்திய இராஜப்பிரதிநிதி லார்ட்லான்ஸ்டௌன் அவர்கள் ஐதிராபாத், மைசூர் இராஜ்ஜியங்களை விஜயம்செய்துவிட்டு நவம்பர்மீ 24உ காலமே 8-மணிக்குச்சென்னை வந்து சேருவார். சென்னையில் 4-5-தின மிருந்துவிட்டு நேரே கல்கத்தாவுக்குப் போவார். நவம்பர்மீ 26உ பச்சையப்பமுதலியார் பாடசாலைகளின் 50-வதுவருஷபூர்த்திமஹோற்சவங் கொண்டாடக் கூடும் சபையில் இராஜப்பிரதிநிதியவர்கள் அக்கிராசனாதிபதியாக வீற்றிருக்கச் சம்மதித்திருக்கிறார்.